# மனநோய் நிபுணருடன் 30 நிமிடம்!



■ டாக்டர் விஜயகுமார்

**மனநோய் நிபுணர் டாக்டர் விஜயகுமார் அவர்களிடம் மன நோய்க்கான அறிகுறிகள், சிகிச்சை முறைகள் பற்றிக் கேட்டபோது...**

நிருபர்: பொதுவாக நம் மக்கள் 'சைக்கியாட்டிரிஸ்ட்' என்றாலே ஒரு மாதிரியாய் நினைக்கிறார்கள். அவர்களிடம் போகத் தயங்குகிறார்களே!

டாக்டர் விஜயகுமார்: அது உண்மைதான். சைக்கியாட்டிரிஸ்ட் என்றால் ஏதோ பைத்தியங்களுக்கு மருத்துவம் பார்ப்பவர் என்றும், அவரிடம் ட்ரீட்மெண்ட் எடுத்துக் கொண்டால் தன்னைப் பைத்தியம் என்று நினைத்து விடுவார்கள் என்றும் பலரும் கருதுகிறார்கள். இது தவறு.

நிருபர்: உங்களிடம் நோயாளிகள் தானாகவே வருவார்களா? இல்லை, உறவினரோ, நண்பரோ அழைத்துக் கொண்டு வருவார்களா?

டாக்டர்: இரண்டு வகையும் உண்டு. மன நோயால் பாதிக்கப்பட்டவர்கள், நாலைந்து டாக்டரிடம் காட்டிவிட்டு, குணமாகாவிட்டால் கடைசியாக சைக்கியாட்டிரிஸ்ட்டிடம் வருவார்கள். சில சமயம் டாக்டர்களே சைக்கியாட்டிரிஸ்ட்டுக்கு விவரமாய் எழுதி, பேஷண்டை அனுப்புவார்கள்.



நிருபர்: மன நோயில் பல வகை உண்டல்லவா?

டாக்டர்: ஆமாம். சிலர் எதற்கெடுத்தாலும் சந்தேகப்படுவார்கள். இருட்டைக் கண்டால் பயம்; திறந்த வெளியைக் கண்டால் பயம்; உயரமான இடத்திலிருந்து கீழே பார்த்தால் பயம்; இவர்கள் தன்னிடம் ஏதோ கோளாறு இருக்கிறதென உணர்ந்து, அதிலிருந்து விடுதலை பெற நினைப்பார்கள். வழி தெரியாது. இந்த வகைக்கு 'நியூரோஸிஸ்' என்று பெயர்.

நிருபர்: இன்னொரு வகை என்ன?

டாக்டர்: சிலபேர் மனோ வியாதியால் பாதிக்கப்பட்டு, ரகளை பண்ணுவார்கள். தன்னை பெரியஅறிவாளி, கடவுள் என்று நினைத்துச் செயல்படுவார்கள். சிலர் உலகம் முழுவதும் தனக்கு எதிரியாய் இருப்பதுபோல நினைத்துக் கொள்வார்கள். இதனால் வீட்டிலும், அக்கம்பக்கத்திலும் இருப்பவர்களுக்கு ஏகப்பட்ட தொல்லைகள். இது 'சைகோஸிஸ்' என்று சொல்லப்படும்.

நிருபர்: நோயாளி தானாகவே தன் பிரச்னையைச் சொல்வாரா?

டாக்டர்: ஒரு சிலர் விவரமாய்ப் பிரச்னையைச் சொல்லி, 'இதைச் சமாளிப்பது எப்படி?' என்று கேட்பார்கள். அப்படி அவர்கள் சொல்லாவிட்டாலும் அவரிடம் என்ன கோளாறு என்று நாங்கள் கண்டுபிடித்து விடுவோம். அதற்குப் பலவிதமான டெஸ்டுகள் உள்ளன. உதாரணமாக நிறையப் படம் போட்ட அட்டைகள் வைத்திருக்கிறோம். அவற்றில் சிலவற்றை நோயாளியிடம் காட்டி, 'இதைப் பார்த்ததும் என்ன தோன்றுகிறது? இதற்கு முன் என்ன நடந்திருக்கலாம்? இனி என்ன நடக்கும்?' என்று கேட்டால், இயற்கையாகவே நோயாளி, அட்டையில் உள்ள படத்தைத் தன் பிரச்னையுடன் இணைத்து, தன் மனத்

தில் இருப்பதைச் சொல்லிவிடுவார். ஒன்றுமே பேச மறுப்பவர் கூட சில வகை இன்ஜக்ஷன்கள் போட்டதும், தன் பிரச்னையைக் கொட்டி விடுவார்கள். ஹிப்னடைஸ் செய்வதும் ஒரு வழி.

நிருபர்: எவ்வளவு நாள் ட்ரீட்மெண்ட் கொடுப்பீர்கள்?

டாக்டர்: அது அந்தந்த கேஸ்களைப் பொறுத்தது. எந்த நோயாளியும் தான் பிரச்னையிலிருந்து உடனடி விடுதலை பெற வேண்டும் என்றுதான் டாக்டரிடம் வருகிறார். எனவே எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் குணப்படுத்தி விடுவோம். ஒருவர் 'டாக்டர்! அடிக்கடி எனக்கு ஒரு பெண் துடிதுடித்துச் செத்துப் போவது போல் ஒரு பிரமை ஏற்படுகிறது. எனக்குத் தலை சுற்றி, மயக்கம் ஏற்படுகிறது' என்று வந்தார். அவரை ஹிப்னடைஸ் செய்து பரிசோதித்தபோது, அவர் சிவாஜி, சுஜாதா நடித்த ஒரு படம் பார்த்ததும், அதில் கர்ப்பிணியான ஹீரோயினை வில்லன்கள் சித்திரவதை செய்து, துடி துடிக்கக் கொல்வதைப் போன்ற காட்சி இடம் பெற்றதும், அது அவரை மிகவும் பாதித்திருப்பதும் தெரிய வந்தது. 'நீங்கள் பார்த்தது வெறும் சினிமாக் காட்சி. பயப் படத் தேவையில்லை' என்று உணரச் செய்தேன். மீண்டும் அந்தக் காட்சியை நினைவுபடுத்திக் கொள்ள வைத்து, 'இப்போது எப்படி இருக்கிறது?' என்றபோது, 'பயமில்லை; ஐயம் ஆல்ரைட்' என்றார். பிரச்னை ஒரே நாளில் தீர்ந்தது.

நிருபர்: மன நோயாளிகளைக் குணப்படுத்த நீங்கள் என்னென்ன முறைகளைக் கையாளுவீர்கள்?

டாக்டர்: நோயாளியுடன் தனியாகப் பேசுதல், அவர் குடும்பத்தாருடன் பேசுதல், (இதற்குப் பெயர் ஃபேமிலி தெரபி) தவிரவும் குரூப் தெரபி என்று பல முறைகளைக் கையாளுவோம். உதாரணமாக, ஓவராய்க் குடிப்பவர் ஒருவரது குடிப் பழக்கத்தை நிறுத்த வேண்டுமெனில், குடிப்பதை அடியோடு நிறுத்திவிட்ட முன்னாள் குடிகாரர் ஒருவரை இவருடன் பேசி, குடியின் கொடுமையை எடுத்துச் சொல்லச் சொல்லி, அவரைத் தானே உணரச் செய்வோம். தவிர 'ஷாக் தெரபி' என்ற மின்சார அதிர்ச்சி முறையையும் கையாளலாம். இது போல நிறைய வழிகள்.



''நான் ஆபீஸில் சும்மாதான் உட்கார்ந்திருந்தேன். ஆனாலும் என்னை சஸ்பெண்ட் செய்து விட்டார்கள்.''

''ஏன்?''

''நான் உட்கார்ந்திருந்தது என் மானேஜருடைய சேரில்!''

—எஸ். ருக்மிணி

நிருபர்: இந்த முறைகளினால் நிரந்தர குணம் ஏற்படுமா?

டாக்டர்: சில கேஸ்களில் நிரந்தர பரிகாரத்துக்குத் தொடர்ந்து மாதக் கணக்கில் மருந்து சாப்பிட வேண்டும். இங்கேதான் ஒருசிலர் தப்புச் செய்கிறார்கள். திடீரென 'நாம்தான் நன்றாயிருக்கிறோமே' என்று எண்ணி மருந்தை நிறுத்தி விடுவார்கள். பிரச்சினை திரும்பிவிடும்.

நிருபர்: 'பொதுவாக எந்த வயதினருக்கு மன நோய் வருகிறது?

டாக்டர்: போதைப் பொருட்களுக்கு அடிமையாதல், பெற்றோரின் அன்பு கிடைக்காமல் ஏங்குதல், காதல் தோல்வி—இவை இளைய தலைமுறையினரின் பிரச்சினைகள். இரு மணமானவர்கள் எனில் டென்ஷன், பணப் பிரச்சினை, என்று காரணங்கள். மிகப் பெரிய பதவி வகித்தவர்கள் ரிடையராகும்போது, அந்தத் திடீர் மாற்றத்தால் தாக்குதலுக்கு உள்ளாகிறார்கள். மாத விலக்கு நிற்கும்போது, தான் எதற்கும் பயனற்றவள் என்ற எண்ணம் தோன்றிச் சில பெண்களுக்கு மன நோய் ஏற்படுவதும் உண்டு.

பேட்டி: எஸ். சந்திரமௌலி

---




**கண்காட்சியில் அறிவிப்பு:**

''இம்மாதம் 20-ஆம் தேதி முடிவுற இருந்த கண்காட்சி பொதுமக்களின் வேண்டுகோளுக்கு இணங்க 16-ஆம் தேதியே முடிவுறும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்!''

—ரா. ஜோதிராமன்




# மீ.ப. சோமுவுக்குப் பரிசு!

"மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமை இல்லை" என்றார் பாரதியார். ஆனால் பழங் கதைகளை 'மறைவாக என்ன, பகிரங்கமாகவே பேசுவேன்' என்று ஆரம்பித்தார் ஒருவர்! ஐம்பது கட்டுரைகளை எழுதி வாரம் ஒன்றாக வானொலி மூலம் பரப்பினார் —மீ.ப. சோமு.

சித்தர் பாடல்களில் உள்ள விஞ்ஞானப் பெருண்மைகளை விளக்கினார்: சாரங்கி தமிழகத்துக்கே உரியது என்று வலியுறுத்தினார்: கர்நாடக இசை என்பது எங்கிருந்தோ வந்ததல்ல அதன் ராகங்கள் பலவும் தமிழகத்துக்கே சொந்தமானவை என்று வாதாடினார்; தென் காசி ஆலயம் பற்றியும் திருமூலர் தத்துவங்களைக் குறித்தும் சொன்னார்.

ஜெர்மனியிலிருந்து வந்த தம்பதி தமிழ் மகள் அணிந்துள்ள உடையைப் பார்த்து வியந்தனர். "அடடா! இத்தனை மடிப்புகளை வைத்து எத்தனை நேர்த்தியாகத் தையல் சாரன் இந்தக் கவுனைத் தைத்திருக்கிறான்!" என்று வியந்தாள் மனைவி. அச்சமயம் அந்தத் தமிழ் மகள் ஆற்றில் குளிப்பதற்காக இறங்கியவள், நீரில் நாகரிகமாக உட்கார்ந்து சேலை முந்தானையைத் தண்ணீரின் மேல் பரப்பில் ஓடவிட்டாள். அப்போது அந்த ஜெர்மானியன் "ஆகா! இது உடை அல்ல கவிதை!" என்றான்!

இப்படி புடைவையின் சிறப்பினைக் கூடக்கூறும் சோமு, கம்பனையும் வள்ளுவரையும் விட்டு வைப்பாரா? தொல்காப்பிய விஞ்ஞானத்தையும் கல்வெட்டு ஆராய்ச்சியையும் கிராமக் கலைகளையும் யோகாசன முறைகளையும் போற்றாமல் விடுவாரா?

இந்த வானொலிப்பேச்சுக்களை ஒன்று விடாமல் கேட்டுக் கொண்டிருந்த வானதி திருநாவுக்கரசு இவை காற்றோடு போய்விடக் கூடாது என்பதாகத் தீர்மானித்து மணியம் செல்வனின் அழகிய மேலட்டைச் சித்திரத்தோடு நூல் வடிவம் தந்தார், "நமது செல்வம்" என்ற தலைப்பில்.

பழங் கதைகள் சொல்வதில் மகிமை இல்லை' யாவது? இதோ இந்த நூலுக்கு இருபதாயிரம் ரூபாய் பரிசு ராஜா சர் அண்ணாமலை செட்டியார் நினைவாக வழங்கிக் கௌரவித்திருக்கிறது எம். ஏ. சி. அறக் கட்டளை. சென்ற ஆண்டு வரை பத்தாயிரமாக இருந்த பரிசு இந்த ஆண்டு இருபதாயிரமாக உயர்ந்து விட்டிருக்கிறது. பழங் கதைகளின் மகிமைக்கு இதைவிட வேறு என்ன சான்று தேவை?

உண்மையில் பாரதியாரின் நோக்கத்துக்கும் சோமுவின் பார்வைக்கும் வித்தியாசம் ஏதுமில்லை. பாரதியே கம்பனையும் வள்ளுவரையும் இளங்கோவையும் போற்றிய பிறகு அடுத்த செய்யுளில்தான் 'மறைவாகப் பழங்கதைகள் சொல்வதில் மகிமையில்லை' என்கிறார்.

நவீன விஞ்ஞான முன்னேற்றங்கள் நமது தேசத்தில் சகல துறைகளிலும் நடைபெற்று வருகின்றன. ஆனால் இந்த வேகம் போதாது: இன்னும் எவ்வளவோ வேகமாக விஞ்ஞான, தொழில் முன்னேற்றங்களை நாம் அடைய வேண்டும். அரசின் கொள்கைகள் அனுமதித்தால் முன்னேறவும் செய்வோம், ஆனால் அந்தப் புதிய வளர்ச்சி காரணமாக நமது தொன்மையான பண்பாட்டின் மதிப்பு அதிகரிப்பதையே காண்போம். இல்லாமலா எத்தனையோ முன்னேறிய நாடுகளைச் சேர்ந்த பேரறிஞர்கள் இங்கு வந்து ஆதிசங்கரர் என்ன செய்தார் என்றும் வேதங்கள் என்ன கூறுகின்றன என்றும் திருமூலரின் ஞானத் தத் சிரிப்பு உணர்த்துவது என்ன என்றும் ஆராய்ந்து கொண்டிருக்கிறார்கள்!

பழைய செல்வங்களைமூலதனமாக்கித்தான் புதிய செல்வங்களை ஈட்ட முடியும், ஈட்டவும் வேண்டும் என்ற கருத்தைத்தான் பாரதி வலியுறுத்தினார்; அதன் எதிரொலியாகவே சோமுவும் இந்த நூலை எழுதியிருக்கிறார்.

புத்தகத்தின் விலை ரூ. 12.50; அது பெற்றுள்ள பரிசு ரூ. 20,000; ஆனால் நமது செல்வமோ விலை மதிக்க முடியாதது!

-கி. ராஜேந்திரன்

[நமது செல்வம், மீ.ப. சோமு, வானதி பதிப்பகம், சென்னை-17]

# இன்சாட்-1பி பெருமைப்படலாம் தானே?

○ எம். எஸ். விமலா, மயிலாடுதுறை

? ஸ்ரீலங்கா தமிழர் பிரச்னை குறித்து திரு ஆர்.வி. மௌனம் சாதிப்பது ஏன்?

! பாதுகாப்பு அமைச்சரின் புத்திசாலித்தனம்.

○ என். எஸ். சதன் சந்தர், மணப்பாறை

? தமிழர் தனி நாடு கோரிக்கையைக் கைவிட்டால் தான் பேச்சுவார்த்தை என்று ஜெயவர்த்தனவும், நிபந்தனையற்ற பேச்சுவார்த்தை என்றால் மட்டுமே பேசத் தயார் என்று அமிர்தலிங்கமும் கூறிக்கொண்டிருப்பது.....?

! 'உன்னாலே நான் கெட்டேன்; என்னாலே நீ கெட்டே....'

○ ஏ. வேலுமுருகேசன், கன்னமனூர்

? எங்கள் ஊரில் உள்ள அரசாங்க நூலகத்துக்கு வந்து கொண்டிருந்த எதிர்க் கட்சிப் பத்திரிகைகளை நிறுத்தி இருட்டடிப்புச் செய்வது முட்டாள்தனம்தானே?

! இதன் மூலம் எதிர்க் கட்சிகளின் குரலை அமுக்கிவிட்டலாம் என்று நினைப்பது முட்டாள்தனம்மட்டுமல்ல, ஜனநாயக விரோதச் செயலும்கூட. லைப்ரரி செஸ் என்பதாக மக்களிடம் வரி வசூலித்துவிட்டு, புத்தகப் பிரசுரகர்த்தர்களுக்கு நூலக ஆர்டர் தராமலே காலத்தை ஓட்டுவது மோசடி.

○ கே. ஆர். ஜனார்த்தனன், தஞ்சாவூர்

? இன்சாட் 1-பி விண்வெளியில் செலுத்தப்பட்டுள்ளதைக் குறித்து நாம் பெருமைப்பட வேண்டும் தானே?

! அதை விண்வெளியில் செலுத்தியது அமெரிக்கா. அதைத் தயாரித்தது அமெரிக்க நிறுவனம். நமது துரதிர்ஷ்டம் அது சரியாக இயங்காமல் மக்கர் பண்ணுகிறது. சீர்பட்டாலும் அதை முழுமையாகப் பயன்படுத்திக்கொள்ளத் தேவையான முன்னேற்பாடுகள் இந்தியாவில் கவனிக்கப்படவில்லை. இந்தச் சூழலிலும் பெருமைப்பட்டே ஆக வேண்டுமென்றால் படுங்கள், ஆட்சேபனை இல்லை.

○ லட்சுமி தங்கம், ஸ்ரீசைலம்

? ஆண் நெஞ்சம் அலைபாய அஞ்சு மீட்டர் வசியம் (4-9-83 கல்கி பின் அட்டை பார்க்கவும்) - தங்களவர் அஞ்சு மீட்டரா? மடிசாரா?

! இது என்ன மாமி, மடிசாரில் வசியமே இல்லை என்பது போல் ஒரு கேள்வி!

○ நந்தலாலா, பண்ருட்டி

? 269 பயணிகளுடன் சென்ற தென் கொரிய விமானம் சுட்டு வீழ்த்தப்பட்டிருக்கிறதே, ருஷ்யா விஷயம், கண்டிக்கப்பட வேண்டிய செயல் அல்லவா?

! நிச்சயமாக. இதைவிடவும் கண்டிக்கப்பட வேண்டியது பனிப் போரை வல்லரசுகள் தீவிரப்படுத்திக் கொண்டே போவதைத்தான். யுத்தம் என்று வந்தால் உலகமே அழிந்துபோகும் என்பது தெரிந்திருந்தும் பரஸ்பரம் நேசப் பான்மையுடன் வாழாமல் சந்தேகங்களை வளர்த்துக் கொண்டே ஆயுதக் குவிப்பு நடத்துவதால்தானே பயணிகள் விமானத்தைக்கூட ஒற்றறிய வந்த விமானம் என்று தவறாகக் கணித்து..

○ வி. ஜாபர், துபாய்

? ஈழத்தில் நடந்த கொடுமைகளுக்காகத் தமிழர் அனைவரும் துடிக்கும்போது தாங்கள் மட்டும் எதிர்மறையாக இருப்பது ஏன்?

! இது அபாண்டம். தமிழர் அடைந்த துயருக்காக உங்கள் மனம் படும்பாட்டுக்கு என் உள்ளம் படும் வேதனை சற்றும் குறைந்ததல்ல. நான் சொல்வதெல்லாம் தனி ஈழத் தமிழ்நாடு கோரிக்கையும் அதை அடைவதற்காக வன்முறையைக் கையாள்வதும் சரியல்ல. சிங்களவர் ஈழத் தமிழருக்குச் சகல விதங்களிலும் சம உரிமைகள் வழங்காதிருப்பதும் முறையல்ல. பரஸ்பரம் ஒருவரை யொருவர் மதித்து நல்லெண்ணத்துடன் சகோதரர்களாய் வாழ்ந்து ஈழநாட்டைச் சொர்க்கபுரியாக்க வேண்டும் என்பதே.

○ எம். முகம்மது இப்ராஹீம், குளச்சல்

? தமிழர்களுக்குத் தனி நாடு வாங்கிக் கொடுத்தால் பத்து ஆண்டுகள் நாங்கள் தேர்தலில் போட்டியிட மாட்டோம் என்று கருணாநிதி அறிவிக்கக் காரணம் என்ன?

! ஜோக் அடிக்க வேண்டும் என்ற ஆசையாக இருக்கலாம்.

○ வெ. கோபால், மாதேமங்கலம் ★

? சரண்சிங்-வாஜ்பேயி இணைப்பு நாட்டுக்கு நன்மை பயக்குமா?

! ஓர் அடிப்படையான பொருளாதாரச் செயல் திட்டத்துடன் எதிர்க் கட்சிகள்


ஹாஜா ஷெரீப்.


சந்தானம்


பிரவீணா


ஆர்.வி.


பெகின்


முத்துசாமி

இணைவது நிச்சயம் பலன் தரும். அந்தத் திட்டம் இப்போதைய இந்திரா காங்கிரஸின் பொருளாதாரக் கொள்கைக்கு மாறானதாக, நோய்க்கு மருந்தாக இருக்க வேண்டும். அவ்வாறின்றி இந்திரா காங்கிரஸைக் கவிழ்ப்பதற்கு என்றே கூட்டுச் சேர்வதால் ஒரு பயனுமில்லை.

**ஜி. குமரேசன், பாண்டமங்கலம்**

? தேசாய், சஞ்சீவ ரெட்டி கடிதங்களை வெளியிட்டது சரியே என்று அருண் காந்தி கூறியிருப்பது பற்றி....?

! அரசியல் தலைவர்கள் பத்திரிகையாளரிடம் அந்தரங்கமாகச் சில விஷயங்களைக் கூறுவார்கள். அவர்கள் சந்தேகங்களைப் போக்கவும் தங்கள் நிலையை விளக்கவும் இது தேவைப்படும். ஆனால் அதை வெளியிட வேண்டாம் என்று கூறுவார்கள். இப்படி அடிக்கடி நிகழ்வதுண்டு. அருண் காந்தி தம்மிடம் அந்தரங்கமாகத் தரப்பட்டதை அம்பலப்படுத்தியதால் அரசியல் தலைவர்களுக்குப் பத்திரிகையாளரிடம் நம்பிக்கை குறையும்.

**பா. சரவணன், பல்லாவரம்**

? ஏன் சார் பிரவீணுவுக்கு இந்த நிலை?

! டி அண்டு சி வைத் தொடர்ந்து ரத்தம் செலுத்தப்பட்டதாகவும் அந்த ரத்தத்தில் ஜாண்டிஸ் கிருமிகள் இருந்து அதனால் இவருக்கும் மஞ்சள் காமாலை வந்ததாகவும் கூறப்படுகிறது. இது நடக்கக் கூடியது தான். ஆனால் பூரண ஓய்வு, ஆகாரக் கட்டுப்பாடு, லிவ்-52 மாத்திரை ஆகியவை மஞ்சள் காமாலையைக் குணப்படுத்தும். மரணம் சம்பவிக்கத் தேவையே யில்லை. பிரவீண விஷயத்தில் விதி விளையாடிவிட்டது. பாக்கியராஜுக்கு கல்கி வாசகர்கள் சார்பில் நமது ஆழ்ந்த அனுதாபங்கள்.

பி. கு.: குடிநீர் வாரியம் வழங்கும் நீரின் மூலமே மஞ்சள் காமாலை நோய் வெகு வேகமாகப் பரவி வருகிறது சென்னையில். கல்கிக்கு வழக்கமாக எழுதும் இரு இளைஞர்கள் இந் நோயினால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள், இப்போது!

**சாமி பிரசாத், மேலத்தானியம்**

? அமைச்சர் முத்துசாமி, பெண் மருத்துவர் கனகா விவகாரம் பற்றி....?

! அமைச்சர் வந்ததும் கைகட்டிக் கொண்டு நிற்கவில்லை என்பதற்காக ஒரு சிறந்த டாக்டர் பழிவாங்கப்பட்டது எம். ஜி. ஆர் அமைச்சரவைக்கே தலைகுனிவு. ஹாண்டே இதை ஒரு தன்மானப் பிரச்னையாக எடுத்துக்கொள்ளாதது ஆச்சரியம்.

**தர்மா ராசகோபாலன், திருச்சி**

? இலங்கைப் பிரச்னை தீராததற்குக் காரணம் மத்திய அரசின் மந்தப் போக்கா, ஜெயவர்த்தனாவின் பிடிவாதமா?

! தமிழருக்கு எதிரான ராணுவ வெறியாட்டத்தைத் தூண்டிவிட்ட அமைச்சர் மாத்யூ பதவி நீக்கப்பட வேண்டும் என்ற தமிழ் அமைச்சர்களின் நியாயமான கோரிக்கையை ஜெயவர்த்தனா ஏற்காதது பிடிவாதத்தை மட்டுமல்ல, மமதையையும் உணர்த்துகிறது.

# நீங்கள் கேட்டவை - தராசு

**பா. நாராயணன், சென்னை-5**

? இஸ்ரேல் நாட்டுப் பிரதமர் பெகின் ராஜினாமா செய்துள்ளாரே?

! பீருட்டில் பாலஸ்தீனிய அகதிகள் முகாமில் நடந்த படுகொலையை யடுத்து என்றோ நடந்திருக்க வேண்டியது. காலம் கடந்த ஞானோதயம்.

**எஸ். மோகன், மே. மாம்பலம்**

? வாரப் பத்திரிகை நடத்துவதற்கும் மாதப் பத்திரிகை நடத்துவதற்கும் வித்தியாசம் என்ன?

! மாத இதழ் ஒன்று முடிந்ததும் சோம்பல் முறிக்கலாம். வார இதழ் முடிந்ததும் அதற்குக்கூட நேரம் இருக்காது. அடுத்த இதழ் தயாரிப்பில் இறங்க வேண்டும்.

**த. சத்தியநாராயணன், அயன்புரம்**

? தரம் என்றால் என்ன?

! மகாராஜபுரம் சந்தானம் கச்சேரியை ஒரு முறை கேளுங்கள், புரியும். சமீபத்திய சென்னை கிருஷ்ண கான சபாக் கச்சேரி தொடக்கம் முதல் தில்லானா வரை ஒரே பிரமிப்பும் மெய்சிலிர்ப்பும்தான்! பாரதியின் 'சுட்டும் விழிச்சுடர்தான் கண்ணம்மா'வில் பிரபஞ்சத்தின் சிருஷ்டி தத்துவத்தையே புரிந்து கொண்டு விட்டது போன்ற ஒரு தெய்விக உணர்வை அவரால் ஏற்படுத்த முடிந்ததை எண்ணி இன்னமும் அதிசயப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.

○ எஸ். ரவீந்திரன், கடலூர்

? கருணாநிதி இல்லாத சட்டசபை எப்படி இருக்கும்?

! உப்பில்லாப்பண்டமாக... அடித்தது அதிர்ஷ்டம் ஹாஜா ஷெரீஃப்புக்கு. ஆனால் அ. இ. அ. தி. மு. க. வும் இ. காங்கிரசும் வெளியே நெருங்கி நெருங்கி வரும் போது சட்டசபையில் எதிர்க்கட்சியாக இ. காங்கிரஸ் பிரமாதமாக என்ன சாதித்து விட முடியும்? ஈழத் தமிழர்களுக்காகக் கருணாநிதி இப்படித் தமிழகத் தமிழர்களைக் கைவிட்டிருக்கவே கூடாது.

○ ஏகலைவன், மேட்டூர் அணை

? அனுபவம் வாய்ந்த அதிகாரிகளே அமைச்சர்களாக வரமுடியும் என்றிருந்தால் நிர்வாகச் சீர்கேடுகள் குறையுமா? இது ஜனநாயக விரோதமானதா?

! அதிகார வர்க்கம் ஒருபுறம், அரசியல்வாதி மறுபுறம் என்ற இன்றைய நடைமுறை மிகச் சிறந்த ஒன்று. அரசியல்வாதிகள் மக்களுடன் பழகி அவர்கள் தேவைகளை உணர்ந்து செயலாற்றுவார்கள். அவர்கள் அத்துமீறும்போதும், அவசரப்படும்போதும் தவறுகள் இழைக்கும்போதும் அதிகாரிகள் எச்சரிப்பார்கள். பரஸ்பரம் விவாதித்தும் விட்டுக் கொடுத்தும் செயலாற்றும்போது நல்லாட்சி நிலவும். ஆனால் இன்றைய அரசியல்வாதி அதிகார வர்க்கத்துக்கு உரிய மதிப்புத் தராமல் அதனை ஒதுக்குவது, நசுக்குவது, அல்லது மிரட்டிப் பணிய வைப்பது என்று நடந்துகொள்கிறார். அதிகார வர்க்கத்தினரும் 'நமக்கேன் வம்பு' என்று ஆட்சியில் இருப்போருக்குத் துதி பாடுகிறவர்களாகி விட்டார்கள். இது தான் கோளாறு.

○ வெ. வைத்தியநாதன், கங்காதரபுரம்.

? பிரபல நட்சத்திரங்கள் எழுதும் தொடர்கதைகளை அவர்கள்தான் எழுதுகிறார்களா?

! அவர்களே எழுதினாலும் கூட, பாவம், யாரும் அதை நம்பப் போவதில்லை!

? எத்தனையோ புதிய எழுத்தாளர்கள் தோன்றிக் கொண்டே இருந்தாலும் எல்லாப் பத்திரிகைகளிலும் சில பிரபல எழுத்தாளர்களின் தொடர்கதைகளே வெளிவருகின்றனவே, ஏன்?

! பூனைக்குக் காலம் வரும் போது அதுவும் யானையாகி ஆட்சி செலுத்தும். 50—60—களில் பிரபலமாயிருந்த நாவலாசிரியர்கள் வேறு; 60—70—களில் வேறு; 70—80—களில் வேறு. மறுபடி காலம் மாறும். இன்றைய புதிய இளம் எழுத்தாளர்களுக்கு நாளை தொடர்கதைகள் எழுத வாய்ப்புக் கிட்டும். அப்போதும் இதே போன்ற கேள்வி பிறக்கும்!

"அப்பா! இனிமேல் என்னைக் கழுதை என்று திட்டாதீர்கள்!"

"ஏன்?"

"அடுத்தவீட்டு மாமா அவர் பையனைக் 'குட்டிச்சுவர்' என்று திட்டுகிறார்!"

-எஸ். மாரியப்பன்



○ மன்னை வாசுதேவன், ஸ்ரீரங்கம்

? நம் நாடு இருக்கும் நிலையில் பெரும் செலவு செய்து தலைவர்களின் பிறந்த நாளைக் கொண்டாடுவது தேவையா?

! அரசியல்வாதிகள் மட்டுமல்ல, சில இசைக் கலைஞர்கள் கூட வருஷா வருஷம் தங்கள் பிறந்தநாளைக் கொண்டாடிக் கொள்ள ஆரம்பித்து விட்டார்கள். அருவருப்பு தட்டுகிறது. ஏதோ 50, 60, 75 வயது என்றால் பரவாயில்லை, ஆண்டுதோறுமா பகிரங்கமாகக் கொண்டாடுவது? மறைந்த மாபெரும் தலைவர்களை ஆண்டுதோறும் நினைவூட்டிக் கொள்வது அவசியம்தான். கொண்டாடினால் போதாது; அவர்கள் காட்டிய பாதையில் நடக்க வேண்டும். ஆனால் இப்போது எல்லாமே போலியாகி விட்டது.

○ ஏ. எஸ். உதயசேகர், தக்கலை

? இந்தியாவில் கிரிக்கெட் விளையாட்டுக்கு உள்ள மதிப்பு வேறு எந்த விளையாட்டுக்கும் இல்லை - சன்மானம் உட்பட. மற்ற விளையாட்டுக்களையும் ஒரே கண்ணோட்டத்தில் பார்த்தால் என்ன?

! மக்களின் பேரபிமானத்தைக் கிரிக்கெட் தான் பெற்றுள்ளது; பண வசூல் ஆகிறது என்னும் போது அதை யொட்டித் தானே மற்றவையும் — சன்மானம், விளம்பரம், விமர்சனம் போன்றவை —அமைய முடியும்!

○ முத்து-நேரு, இராஜபாளையம்

? கலைஞரைக் கடுமையாக விமர்சிக்க ஜெயலலிதாவுக்கு அரசியல் தகுதி உண்டா?

! பொது வாழ்வில் ஈடுபட்டு விட்டவர்களை விமர்சிக்க ஜனநாயகத்தில் சகலருக்கும் உரிமை உண்டு. ஜெயலலிதா ஏன் விமர்சிக்கக்கூடாது? அந்த விமர்சனம் கண்ணியமான முறையிலும் நேர்மையான உள்ளத்துடனும் நடந்தால், ஜனநாயக அரசியல் ஆரோக்கியமாக இருக்கும்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

வெ. கோபால்,
மாதேமங்கலம் (அஞ்சல்)
லளிகம் (வழி),
தர்மபுரி மாவட்டம்.

# டெபாசிட்தாரர்களுக்கு V.I.P. BRIEF CASE அன்பளிப்பு

## நம்பிக்கையின் ஒளி விளக்கு 'பாலாஜி'

# 22%

டெபாசிட்தாரர்களுக்கு வழங்கும் கூடுதல் வட்டி



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |

6 மாதங்கள் வரை-16%

3 மாதங்கள் வரை-15%

உங்கள் டெபாசிட்டுகளை அனுப்பும் முகவரி

## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

91. உஸ்மான் ரோடு, (சிவா விஷ்ணு கோயில் அருகில்)
தி. நகர், சென்னை-600 017. போன் : 447186

| | |
|---|---|
| பெங்களூர் | : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971 |
| தஞ்சாவூர் | : எண் : 2 & 3, முதல் மாடி, ஜி.ஏ. கனால் ரோடு, தஞ்சாவூர், போன் : 1626 |
| திருவண்ணாமலை | : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன் : 483 |
| பட்டுக்கோட்டை | : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை, போன் : 453 |

CHARI


சவடால் பேச்சு
சுட்டு வீழ்த்தப்பட்ட
பயணிகள் விமானம்


பிந்த்ரன் வாலே
லாங்கோவால்


கொடுத்துச் சிவந்த கரம்...
மந்திரி பதவி கொடுத்துச் சிவக்கும் கரம்...



# கல்கி



1983 செப்டம்பர் 18
ருத்ரோத்காரி புரட்டாசி 2
மலர் : 42 இதழ் : 7

## முட்டுக்கட்டை மன்னர்கள்!

ஒரு பக்கம், ''உற்பத்தி அதிகரிக்க வேண்டும், பொருளாதாரம் மேம்பட வேண்டும் என்று சொல்லிக் கொண்டே இன்னொரு பக்கம் முட்டுக் கட்டையும் போட்டுக் கொண்டிருப்பதில் நமக்கு நிகரானவர் உலகில் வேறெங்கும் இல்லை. அபரிமிதமான பல்வேறு வரிகள், பர்மிட்—லைசென்ஸ்—கண்ட்ரோல்கள் இவையெல்லாம் ஏற்கெனவே உற்பத்தியைப் பாதித்து வருவது போதாதென்று மத்திய நிதி அமைச்சர் கடைசியாகச் சமர்ப்பித்த பட்ஜெட்டில் விளம்பரத்துக்கும் வரி விதித்துள்ளார். இதன்படி ஒரு நிறுவனம் தனது விளம்பரச் செலவில் இருபது சதம் மீது வரி செலுத்த வேண்டும்.

உற்பத்தி செய்து அடுக்கி வைத்தால் போதுமா? உற்பத்தியான பண்டங்கள் துரிதமாக விற்பனையானால்தானே உற்பத்தியை மேலும் அதிகரிக்க முடியும்? இதற்கு உதவுவன விளம்பரங்கள். விளம்பரம் செய்வது வீண் விரயம் என்ற கருத்து பிற்போக்கானது. விளம்பரத்தின் மீது வரி என்றால் அது உற்பத்தியை நேரடியாகப் பாதிக்கவே செய்யும்.

இந்த வரி ஜனநாயக விரோதமானதும் கூட. ஒரு பண்டத்தை உற்பத்தி செய்ய அனுமதிக்கப்பட்ட ஒருவனுக்கு அதை விற்பனை செய்யவும் ஜனநாயகத்தில் முழு உரிமை இருக்க வேண்டும். இந்த உரிமையைக் கட்டுப்படுத்துவதாக இருக்கிறது இந்த வரி. மேலும் பத்திரிகைப் பொருளாதாரத்தையும் பாதிப்பதால் பத்திரிகைச் சுதந்திரத்துக்கும் ஆபத்து விளைவிப்பதாக இருக்கிறது.

ஆளும்கட்சி ''சாதனை''களைப் பட்டியலிட்டும் வாக்குறுதிகளை அள்ளி வீசியும் தேர்தல் சமயத்தில் செய்யும் பொய்ப்பிரச்சார விளம்பரங்களுக்குத் தடை ஏதும் இல்லை. இரண்டு கோடி பரிசு என்று ஆசை காட்டி மக்களை மோசம் செய்யும் அரசாங்க லாட்டரி விளம்பரங்களுக்கு எவ்விதக் கட்டுப்பாடும் கிடையாது. ஆனால் தொழில் நிறுவனங்கள் விற்பனையைப் பெருக்கி உற்பத்தியை அதிகரிக்கச் செய்யும் நியாயமான விளம்பரங்கள் மீது வரி!

இந்தத் தேசம் எப்படி உருப்படும்?

## நம்பிக்கை இழக்கக் கூடாது

'ஜி. பி. தூது தோல்வி' என்று கருதுவதும் பேசுவதும் ஈழத்தமிழர் பிரச்சினை தீர உதவாது. ஜி. பி. அற்புதங்களைச் சாதிக்கப் போவதாகக் கூறிக் கொண்டு இலங்கை செல்லவில்லை. 'சிரமமான காரியம்' என்று அடக்கத்துடன் கூறிப் போனார். அமிர்தலிங்கமும் ஜெயவர்த்தனவும் சந்தித்துப் பேச வழிவகுத்தார். சிரிமாவோவின் யோசனைகளுக்குச் செவிமடுக்குமாறும் செய்திருக்கிறார். இதெல்லாம் சாதனைகள் அன்றி வேறென்ன?

இருதரப்பிலும் மனக்கசப்பு ஏகமாக வளர்ந்திருக்கிறது. வறண்ட பாலைவனத்தில் நம்பிக்கைப் பயிர் செய்ய வேண்டிய அசாத்தியமான பணியில் கணிசமான வெற்றி பெற்றுள்ளார் ஜி. பி. காரியம் முடிந்த பாடில்லைதான். ஆனால் பேச்சு வார்த்தைகளில் நம்பிக்கை இழக்கக் கூடாது. மேலும் தொடர வேண்டும். இல்லையேல் அராஜகம்தான் மீண்டும் தலையெடுக்கும்.

துவேஷமெனும் நச்சுப் பொய்கை அன்பெனும் அமுத ஊற்றாக மாறட்டும். 'ஒரே உலகம்' என்ற தத்துவம் தழைக்கும் நாளில் சின்னஞ்சிறிய இலங்கைத் தீவில் இரு இனத்தவரிடையே ஒற்றுமை நிலவ முடியவில்லை எனில் அது மனித குலத்துக்கே அவமானம்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# மகாகவி பாரதியாரின் தீந்தமிழ்ப் பாடல்கள். ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் தேனினுமினிய குரலில் கேட்டு மகிழுங்கள்.



அண்மையில் நூற்றாண்டு விழாக் கண்ட தேச மகாகவி பாரதியாரின் பாடல்களைத் தொகுத்து நமது இசையரசி ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி வழங்கவிருக்கும் மூன்று நீண்டநேர இசைத் தட்டுகளில் இது முதலாவதாகும். நாட்டுப் பற்றுக் கனல் பறக்கப் பாடிய அம்மஹாகவி பக்தி பரவச நிலையில் துதிகளெடுத்த தெய்வீகக் கவியுமாவார் என்பதை நமக்கு நன்கு உணர்த்தும் வகையில் இவ்விரு விதமான கீதங்களிலிருந்தும் பொறுக்கு மணிகளைத் தேர்ந்தெடுத்து இங்கு கோத்துக் கொடுத்திருக்கிறார் ஸ்ரீமதி எம்.எஸ். இவ்விசைத் தட்டு மஹாகவி பாரதியாரின் பூரண வடிவத்தை, அவரது அடர்ந்த உணர்ச்சி வேகத்தை, ஆழ்ந்த கவித்வ மேதையை, அதிகாரபூர்வமான தீர்க்க திருஷ்டியை — வடித்துத் தருகிறது.

முதற் பக்கம் :

- மரபுக்கேற்ப, தொடக்க கீதமாக விநாயகப் பெருமானைக் குறித்து பாரதியார் செய்த ''விநாயகர் நான்மணி மாலை''யிலிருந்து சில அடிகள் இன்னிசைக் கோலங்களாகின்றன.

- அடுத்து ஆனைமுகன் தம்பி ஆறுமுகனைக் குறித்த ''வில்லினை ஒத்த புருவம் வளைத்தனை'' என்று தொடங்கும் ''வேலன் பாட்டு''. சூராதியவுணரை வதைத்த அவனது சூரத்தனத்தையும், குறவள்ளியிடம் அவனது காதலின் ஈரத்தனத்தையும் மாற்றி மாற்றிச் சித்தரிக்கும் நீண்ட பெரும் பாடல்.
- தொடர்ந்து வருகிறது ''எத்தனை கோடியின்பம்'', ஜடத்தையும் சைதன்யத்தையும் பிணைத்து ஜகத்தைப் புனைந்துள்ளானே, இறைவன் இதன் மாயை பற்றாத முக்தி என்ற ஒன்றை வைத்துள்ளானே, முக்தி மார்க்கமாக பக்தி என்னும் அன்பு நிலையையும் அருளியுள்ளானே என்பதில் நிறை நன்றியோடு கவிஞன் யாத்த பாடல்.

- ஜகத்சித்ர விநோதத்தை பராசக்தியின் விளையாட்டாகக் கண்டு. அக்களியாட்ட வெள்ளத்தில் சிக்கிய நிலையிலேயே பாரதி ''வெள்ளமெனப் பொழிந்த'' காவடிச் சிந்தை அடுத்துக் கேட்கிறோம். ''காலமாம் வனத்தில் அண்டக் கோலமா மரத்தின் மீது காளி சக்தியென்ற... ரீங்கார... வண்டு'' நம் அகத்துள் பாய்ந்து சுற்றிச் சுற்றி ரீங்கரிக்கும் மதுரகானம்.

இரண்டாம் பக்கம் :

- பாரதத்தாயை வங்க மாகவி பங்கிம் சந்திர சட்டர்ஜி போற்றியெடுத்த 'வந்தே மாதர' கீதத்துக்கு பாரதி நல்கிய தமிழ் வடிவை இப்பக்கத்தில் முதற்பாட்டாக கேட்கிறோம். நம் சொற்சிற்பி வேறொரு சொற் சிற்பியின் சிந்தனை வளத்தைப் போற்றி அச்சிந்தனையைத் தனதேயாக்கித் தனது தேமதுரச் சொல்லில் ''ஜாதீய கீதம்'' என்று முகுடமிட்டுத் தந்திருக்கிறார்.

- தொடர்ந்து ''பாரத தேசமென்று பெயர் சொல்லுவார்'' எனத் தொடங்கும் பாடலின் பத்தடிகள் ராக மாலிகையாக வருகிறது. கலாசாரம், தொழில், வர்த்தகம், விஞ்ஞானம் யாவற்றிலும் சுதந்திர பாரதம் இதுவரை அடைந்துள்ள, இனி அடைய வேண்டிய முன்னேற்றங்களை எழுபதாண்டுகளுக்கு முன்பே பாடி நம்மை வியப்பிலாழ்த்தும் கவி, இவற்றோடு ''வானையளப்பதையும், சந்திர மண்டலத்தியல் கண்டு தெளிவதை'யும் கூட நவின்று நம்மைப் பிரமிக்க வைக்கவே செய்கிறார்!

- இதனைத் தொடர்ந்து இன்பத் தேனாக நம் காதினிலே வந்து பாயுது ''செந்தமிழ் நாடெனும் போதினிலே''

- முடிவில் ''வாழிய செந்தமிழ்'' கீதம் நந்தமிழ் நாட்டை வாழ்த்தித் தொடங்கும் பாடல் ''வந்தே மாதரம்'' என்று ''பாரத மணித் திருநாட்டை'' வணங்கி நிறைகிறது.

இந்த இசைத்தட்டில் ஒலிக்கும் ராகமணிகள் : ஹம்ஸத்வனி, படதீப், பெளளி, ஆனந்த பைரவி, செஞ்சுருட்டி, ஸிந்துபைரவி, சுத்த ஸாரங்க, தேஷ்,பிருந்தாவன ஸாரங்க, மோகனம், குந்தலவராளி, காபி, மத்யமாவதி.

பார்வை பெறுவதற்குப் பாட்டின் பயன் :
இவ்விசைத் தட்டில் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மிக்குரிய சன்மானம் கண் மருத்துவ மனையான சென்னை சங்கர நேத்ராலயத்துக்கு அர்ப்பணிக்கப்படுகிறது.









தி கிராமபோன்
கம்பெனி ஆப்
இந்தியா லிமிடெட்

# பாம்பு பாம்பு...

**பாம்புகடி முதலுதவியாளர்கள் 1260 பேர் நியமனம்—செய்தி.**

அழுகுணியடிச்சான்பாளையம் கிராமத்தைச் சேர்ந்த அரசு ஆரம்ப சுகாதார நிலையத்தில் அன்று காலை, ரிகார்ட் டான்ஸ் டிக்கெட் க்யூ வரிசை போல் ஏராளமான பேர் காத்துக் கிடந்தார்கள்.

சரியாகக் காலை எட்டு நாற்பத்தாறுக்கு, பாம்புகடிமுதலுதவியாளரானபஞ்சாட்சரம், ஐயர் ஹோட்டலில் பொங்கலும் கீரை வடையும் சாப்பிட்டுவிட்டுக் கையை முகர்ந்து பார்த்தபடியே நிலையக் கட்டிடத்துக்குள் நுழைந்தார். அவர் அந்த ஊருக்கு மாற்றலாகி வந்து மூன்று மாதமாகிறது. இதுவரையில் ஒருவர் கூடஅவரை நாடி வரவில்லை.. அதனால் சலித்துப் போயிருந்த அவர், நேரத்தை வீணடிக்காமல் இழந்த ஆண்மையை இருபத்திநாலே மணி நேரத்தில் மீட்டுத் தரக்கூடிய மரங்கொத்தி




லேகியம் தயாரிப்பது பற்றிய தனிப்பட்ட ஆராய்ச்சியில் முனைந்திருந்தார்.

லேகியத் தயாரிப்பை நேற்று விட்ட இடத்திலிருந்து இன்று தொடரலாம் என்று தீர்மானித்தவரிடம், ஆ. சு. நிலையக் கடைநிலை ஊழியரான துரைக்கண்ணு ஓடிவந்து, ''சார்! இன்னிக்கு வந்திருக்கிற கேஸ் முழுதும் நீ பார்க்க வேண்டியதுதான்! உன் பாடு குஷிதான்!'' என்று தகவல் கொடுத்தான். அத்துடன் அலை மோதிக் கொண்டிருந்த நோயாளிகள் வரிசையையும் சுட்டிக் காட்டினான். அதிர்ந்தார் பஞ்சாட்சரம். 'ஒரே நாளில் இவ்வளவு பாம்புக் கடி கேஸ்களா?'

''சரி, ஒவ்வொருத்தராக உள்ளே அனுப்பு'' என்று உத்தரவு போட்டுவிட்டு, மேஜையருகில் போய் அமர்ந்தார். அடுத்த நிமிடமே அவரை ஒரு கும்பல் சூழ்ந்துகொண்டது. அவர்களிடம் 'க்யூ'வில் வரவேண்டியதன் அவசியத்தைப் பற்றி எடுத்துச் சொல்லலாமா என்று ஒரு நிமிடம் யோசித்தார். முன்பு வேலைபார்த்த முருங்கைப்பட்டியில் இது போல உபதேசம் செய்யப் போக, இரண்டு தங்கப் பற்கள் கட்டிக் கொள்ள வேண்டிய அவசியம் நேர்ந்தது நினைவுக்கு வரவே, உபதேசத்தை மறந்து விசாரிப்பில் மூழ்கினார்.

''என்ன ஆச்சு உங்களுக்கெல்லாம்?''

''பாம்பு கடிச்சிட்டுதுங்க....''

''ஐயோ, வலி தாங்கலிங்க!''

''ஏதாவது மருந்து கொடுங்கய்யா!''

''எரியுதுங்க தோள்பட்டை யெல்லாம்!''

பஞ்சாட்சரம், ''இருங்க!'' என்று கையமர்த்திவிட்டு, மேஜை டிராயரைத் திறந்து ஒரு கற்றை அச்சிட்ட பேப்பரை எடுத்தார். அவசர அவசரமாக அதை ஆளுக்கு ஒன்றாக விநியோகித்தார்.

''இதுதாங்க பாம்பு கடி சிகிச்சை மனு... இதை எல்லோரும் முதல்லே பூர்த்தி செய்து கொடுங்க! அதுக்கு அப்புறம்தான் மத்த விஷயங்களைக் கவனிக்க முடியும்!''

கூட்டம் சரசரவென்று பின்வாங்கியது. பேனாவுக்கும் பென்சிலுக்கும் அல்லாடியது. சுமார் இருபது நிமிடங்களுக்குப் பிறகு, நிரப்பப்பட்ட மனுக்கள் பஞ்சாட்சரத்தின்மேஜை மீது வந்து குவியத் தொடங்கின.

''எல்லாரும் மனுக்கொடுத்தாச்சில்லே! அப்படிக் கொஞ்சம் காத்திருங்க... மனுக்களைப் பரிசீலனை செய்த பிறகு, ஒவ்வொருத்தராக் கூப்பிடறோம்... அப்போதான் வரணும்!''

''ஏங்க! ஒரு சந்தேகம்'' என்றார் ஓர் இளைஞர்.

''என்னப்பா?''

''மனுவிலே தாசில்தார் கையெழுத்து எதுவும் வேண்டாங்களா?''

''வேணும்பா... இது கொஞ்சம் அவசரமா கவனிக்க வேண்டிய விஷயமாச்சே! அதனுலே அர்ச விதிவிலக்குக் கொடுத்திருக்கு...''

மனுக்களைப் பரிசிலனை செய்யத் தொடங்கினர் பஞ்சாட்சரம். தாழ்த்தப்பட்டோர், பிற்பட்டோர், பழங்குடியினர் ஆகியவர்களின் மனுக்களை மட்டும் முதலில் பிரித்து எடுத்து வைத்துக் கொண்டார். யாரோ இரண்டு பேர் அந்தப் பகுதி சட்ட மன்ற உறுப்பினரின் பொரிக்கக் கடிதங்களையும் மனுவுடன் இணைத்திருக்கவே, அவற்றையும் தனியே எடுத்து வைத்தார். ஒரு பெண்மணி, ஆளும் கட்சி வட்டச் செயலாளரின் பரிந்துரையை மட்டும் மனுவுக்குப் பதில் வைத்திருந்தாள். இன்னும் இருவர் உள்ளூர் சாராயக் கடை அதிபரின் (ஆளும் கட்சிப்










**முகுந்தன்**

பிரமுகரின் மச்சான்) கடிதங்களை மனுவுடன் வைத்திருந்தார்கள். அவற்றை எல்லாவற்றுக்கும் மேலாக எடுத்து வைத்தார்.

''துரைக்கண்ணு! இந்த ஆசாமிகளை முதலில் வரச் சொல்லு!'' என்று அந்த மனுக்களை அவனிடம் கொடுத்தார். கோர்ட் பியூன் போல மனுதாரர்களின் பெயர்களை உரக்கக் கூவியழைத்த துரைக்கண்ணு, அவர்கள் ஒவ்வொருவரிடமும் 'மாமூல்' வசூலிக்க முற்பட்டபோது கொஞ்சம் சலசலப்பு. ''வட்டச் செயலாளர் கிட்டே இதைப் பத்திப் புகார் செய்யட்டுமா?'' என்று ஒருவர் கேட்டபோது ''அவருக்காகத்தான் ஐயா இதை வசூலிக்கிறோம்.... நீ போய் நல்லா புகார் பண்ணு! உன் டங்குவார்தான் அறுந்து போகும்!'' என்று துரைக்கண்ணு எச்சரிக்கவே அமைதி. அமைதி...

தேர்ந்தெடுக்கப்பட்ட நோயாளிகள் வரிசையாகப் பஞ்சாட்சரத்தின் முன்பு வந்து நின்றார்கள்.

''இதிலே யாருக்கு ஊசி போடலாம், யாருக்கு மாத்திரை மட்டும் போதும், யாருக்குக் களிம்பு தேவை என்று எனக்குத் தெரியணும்... இந்த மனுவிலே உங்கள் தேவைகளைக் குறிப்பிட்டுக் கொடுங்கள்!'' என்று மீண்டும் சில மனுக்களை அள்ளிக் கொடுத்தார் பஞ்சாட்சரம்.

இன்னும் ஒரு கால் மணி. மீண்டும் மனுக்கள் சமர்ப்பிக்கப்பட்டதும் பஞ்சாட்சரம் அவற்றைச் சிகிச்சைவாரியாகப் பிரித்து வைத்துக் கொண்டார்.

''முதல்லே ஊசிக் கேஸ்களைத்தான் கவனிக்கணும்... அதுதான் அரசு உத்தரவு... சரி, பெரிய ஊசியா, சின்ன ஊசியா — எது தேவைன்னு இதிலே எழுதிக் கொடுங்க...'' மீண்டும் சில மனுக்கள் கைமாறின.

ஊசி போடும்படி கேட்டிருந்தவர்கள் எல்லோரும் சின்ன ஊசிக்கே வோட்டுப் போட்டிருந்தார்கள்.

''எல்லோருக்கும் சின்ன ஊசிதானு? அப்படின்னு கொஞ்ச நேரம் வெயிட் பண்ணுங்க... கூப்பிடறேன்'' என்று கூறிவிட்டு மாத்திரைக் கேஸ்களை அழைத்தார்.

''உங்களுக்கு இனிப்பு மாத்திரை, கசப்பு மாத்திரை, புளிப்பு மாத்திரை — இதிலே எது வேணும் சொல்லுங்க!''

''ஏங்க, சுர்ருன்னு காரம் ஏறுகிற மாதிரி மாத்திரை ஏதும் கைவசமில்லீங்களா நம்ம கிட்டே?''

''ஸ்டாக் இல்லீங்க. இருந்தா நானே கேட்டிருக்க மாட்டேனா? ஏன்யா இப்படிக் கேள்வி கேட்டு என் உசிரை வாங்கறீங்க?''

''மன்னிச்சுக்குங்க சார்... தெரியாமல் கேட்டுட்டேன்.''

''சரிசரி, இந்த மனுக்களை நிரப்பிக் குடுங்க. நேரத்தை வீணாக்காதீங்க...''

மாத்திரையின் ருசி பற்றி மனுதாரர்கள் குறிப்பிட்டதும், ''கறுப்பு, சிவப்பு, வெளுப்பு, பச்சை, நீலம், ஊதா, மஞ்சள் — எந்தக் கலர்லே மாத்திரை வேணும்? அதையும் எழுதிக் கொடுங்க!'' — மறுபடியும் மனுக்கள். பரப்பல். தாக்கல்.

''சரி... அப்படி உட்காருங்க... யார்யா களிம்பு கேட்டது? வாங்க இப்படி!'' என்று அடுத்த குழுவை அழைத்தார் பஞ்சாட்சரம்.

அவர்களிடம் 'போட்டவுடன் உடம்பெல்லாம் எரியக் கூடிய களிம்பா, குளுகுளு வென்று ஐஸ் வைத்தது போல உணரச் செய்யும் களிம்பா, எது தேவை என்று கேட்டு ஒரு செட் மனுக்களையும், பிறகு எந்த வண்ணக் களிம்பு வேண்டும் (நல்ல வேளையாக இரண்டு வண்ணங்களிலேயே களிம்பு இருந்தது) என்று கேட்டு இன்னொரு செட் மனுக்களையும் வாங்கி வைத்துக் கொண்டார். அவர்களையும் காத்திருக்கச் சொன்னார்.

வெவ்வேறு ரக மனுக்களை அவற்றுக்கான பதிவேடுகளில் பதிந்து கொண்டு வரிசை எண் கொடுத்தார். இதற்குள் மேலும் ஒரு மணி நேரம் ஓடிவிட்டது. அத்தனை நேரமும் நோயாளிகள்வலியைப் பொறுத்துக்கொண்டு வாயை மூடிக்கொண்டு, தலைவிதியை நொந்தவண்ணம் பெஞ்சுகளில் நெளிந்து கொண்டிருந்தார்கள்.

பதிவு வேலை முடிந்ததும் இருக்கையி லிருந்து எழுந்து கூட்டத்தின் பின்புறம் சென்று இரண்டு 'பனுமா'க்களை இறுதி வரை இழுத்து இழுத்து இன்பம் அடைந்தவராகப் பஞ்சாட்சரம் மீண்டும் வந்து அமர்ந்தார்.

''ஊசி கேட்டவங்க ஒவ்வொருத்தரா வாங்க இப்படி!''

வந்தார்கள்.

அவர்கள் கையிலா, காலிலா, முதுகிலா, இடுப்புப் பிரதேசத்திலா — எங்கே ஊசி குத்திக் கொள்ள விரும்புகிறார்கள் என்று தனித் தனியே ஒரு முறைக்கு இரு முறையாகக் கேட்டு, சிறுசிறு குழுக்களாகப் பிரித்து நிற்கவைத்தார் பஞ்சாட்சரம்.

அடுத்த கட்டம்: ஊசியைத் தேடி எடுத்தல்.

''துரைக்கண்ணு! எங்கேய்யா ஊசி?''

கடைவாய்ப் பல்லில் புகுந்து விட்டிருந்த பாக்குத் தூளைக் குண்டூசியால் அப்புறப் படுத்துவதில் ஈடுபட்டிருந்த துரைக்கண்ணு அதைச் சட்டையில் அப்படியே துடைத்து, எடுத்து நீட்டினான்.

''இது இல்லேய்யா... இஞ்செக்ஷன் ஊசி!'

துரைக்கண்ணு பாய்ந்து சென்று பழைய டிரங்குப் பெட்டி ஒன்றைத் திறந்து, அதற் குள்ளிருந்து துருப்பிடித்த ஒரு சாக்லேட் டப்பாவை எடுத்து, அதையும் திறந்து, ஒரு அட்டையில் குத்திப் பத்திரமாக வைக்கப் பட்டிருந்த ஊசியைக் கொண்டு வந்தான்.

ஸிரிஞ்ச், பஞ்சாட்சரத்தின் மேஜைமீதே கிடந்தது. அதை எடுத்து, வாயால் தூசியை ஊதி, ஊசியைப் பொருத்தினார். இதற்குள் துரைக்கண்ணு குட்டி குட்டியான மருந்து புட்டிகளை எடுத்து வந்து நீட்டினான். உற்சாகமாக விசில்அடித்தபடியே,ஸிரிஞ்சில் மருந்தை ஏற்றி, குழுவுக்குக் குழு தாவி, இஞ்செக்ஷன் போட்டார் பஞ்சாட்சரம்.

''போகலாங்களா?'' என்று கேட்டார் ஒருவர்.

''வீட்டுக்குப் போய் சுடுதண்ணி ஒத்தடம் கொடுங்க. வலி அதிகமாக இருந்தால் பல்லைக் கடிச்சுக்கிட்டுப் பொறுத்துக்குங்க..... மூணு நாள் கழிச்சு மறுபடியும் என்னை வந்து பாருங்க!'' என்று சொல்லி, அவர்களை அனுப்பி வைத்தார் பஞ்சாட்சரம்.

மாத்திரை கேட்டவர்களுக்கு அவர்கள் விரும்பிய வண்ண மாத்திரைகளைக் கொடுத்துக்கொண்டே வந்தபோது, புட்டிகள் காலியாகிவிடவே, ''அவ்வளவுதான்...'' என்று சொன்ன பஞ்சாட்சரத்தைக் கண் ஜாடை

காட்டித் தனியே அழைத்தான் துரைக் கண்ணு.

''என்ன சார்! மாத்திரை ஸ்டாக் இல்லேன்னு சொல்லப் போயிட்டியே! உனக்குத் தானே கெட்ட பேரு வரும்... இந்தா, இதைப் பொடி பண்ணிக் கொடுத்தனுப்பு... அவுங்க மாத்திரைன்னு நினைச்சுக்கிட்டு இதை முழுங்கட்டும்....அப்புறம் ஆண்டவன் விட்ட வழி!'' என்று சொல்லிச் சட்டைப் பாக்கெட்டிலிருந்து அரைடஜன் பல்லி மிட்டாய்களை எடுத்து நீட்டிய துரைக்கண்ணுவை உச்சி முகர்ந்துவிட்டு, அவன் சொன்னபடியே செய்தார் பஞ்சாட்சரம்.

அடுத்தபடியாகக் களிம்பைத் தேடியபோது அது கட்டி தட்டிப் போய்க் கிடப்பது தெரிய வரவே, அங்கே இங்கே தேடியதில் 'பவர்கட்'டுக்குப்பயந்துவாங்கி வைத்திருந்த இரண்டு மெழுகுவர்த்திகள் கிடைத்தன. அவற்றைப் பொடி செய்து ''இதை வேப்ப எண்ணெயிலே குழைச்சு மூணு வேளை போடுங்க... சரியாப் போயிடும்!'' என்று சொல்லி அவர்களை அனுப்பி வைத்தார் பஞ்சாட்சரம்.

இத்தனை வேலைகள் செய்த களைப்புத் தீர, சூடாகக் காப்பி சாப்பிட்டால் தேவலை என்று தோன்றவே, துரைக்கண்ணுவை ஹோட்டலுக்கு விரட்டினார். அரை மணியில் வந்து சேர்ந்த காப்பியைக் குடித்த பின்னரே, சிகிச்சைக்கு வந்திருந்த — முன்னுரிமை பெறாத — மற்றவர்களின் நினைவு அவருக்கு வந்தது.

''கூப்பிடப்பா.. அவங்களுக்கு ஏதாவது பதில் சொல்லி அனுப்பலாம்... ஃபார்வேர்ட் கம்யூனிட்டி ஆசாமிங்க ரெண்டு பேர் இருந்தாங்க. அவங்க ஏதாவது பத்திரிகைகளுக்கு லெட்டர் எழுதித் தொலைக்கப் போறாங்க!'' என்று கூறி, துரைக்கண்ணுவை ஏவினார்.

வெளியில் சென்று பார்த்ததுரைக்கண்ணு, ''சார்! அவங்க யாரையும் காணம்மே... வீட்டுக்குப் போயிட்டாங்க போலிருக்கு!'' என்று திரும்பி வந்து சொன்னதும், ''காத்திருக்காதது அவங்களோட தப்பு... அதுக்கு நாம என்ன செய்ய முடியும்? ரூல்ஸ்படிதான் நடந்துக்கிட்டோம்னு சொல்லிடலாம்'' என்று சொல்லிச் சமாதானமடைந்தார் பஞ்சாட்சரம்.

மறக்காமல் சொல்ல வேண்டிய இரண்டு முக்கியமான 'வால்' சமாசாரங்களாவன:

1. பஞ்சாட்சரத்துக்குப் பதவி உயர்வு கிடைத்து இப்போது பக்கத்து ஊரில் பஞ்சாயத்து யூனியன் மருந்தகத்தில் தலைமைப் பொறுப்பில் இருந்து வருகிறார். பாம்பு கடித்த முப்பத்தாறு பேரைத் தமது முயற்சியால் ஒரே நாளில் அவர் காப்பாற்றியதை யொட்டியே இந்தப் பதவி உயர்வு. இதற்கு வட்டச்செயலாளரின் சிபாரிசும் ஒருகாரணம்.

2. அந்த அப்பாவி கிராமவாசிகளைக் கடித்தது பாம்பல்ல, ராட்சதக் கொசுக்களே. எனவேதான் பஞ்சாட்சரத்தின் கவனிப்பையும் மீறி எல்லாருமே உயிர் பிழைத்து விட்டார்கள்!

# பாக்யராஜ் ரசிகர்களுக்கு அவமானம்!

பாக்யராஜ் அவர்களை 4.9.83 இதழ் அட்டையில் வெளியிட்டு, அவரிடமிருந்து ஒரு வித்தியாசமான பேட்டிக் கட்டுரையையும் வெளியிட்டு வாசகர்களைப் பரவசப்படுத்தி விட்டீர்கள்.
வடலூர். வெ. லட்சுமிநாராயணன்.

சினிமாச்செய்திகளை மையமாகக் கொண்டு வெளிவரும் இதழ்களில் கூட இதுவரை பாக்யராஜின் இப்படியொரு பேட்டி வந்தது கிடையாது.
வேலூர் வசந்தா ப்ரியன்.

தமிழ்த் திரை உலகின் சக்கிரதிசை நாயகன் பாக்யராஜ் அவர்களின் அட்டை வண்ணப் படத்தைப் போலவே அவருடைய பேட்டிக் கட்டுரையும் அடக்கமாகவும் அழகாகவும் நேர்த்தியாகவும் அமைந்திருந்தது.!
ஈரோடு—10. மேஜர் தாசன்.

பாக்கியராஜ் முருங்கைக்காய் சமாசாரத்திற்கு என்னதான் சப்பைக் கட்டு கட்டினாலும் 'முந்தானை முடிச்சு' ஆபாசத்தை அஸ்திவாரமாகக் கொண்டு கட்டப்பட்டதுதான் என்பதை அவரது மனச்சாட்சி கண்டிப்பாக ஒப்புக் கொண்டே ஆகவேண்டும்.
அலங்கியம். தி. வே. மூர்த்திநாதன்.

சிறுவர்களெல்லாம் 'முருங்கைக்காய்' மகாத்மியம் பற்றிப் பேசுவதைக் கண்டு அதிர்ச்சியடைந்தவர் பலர். மக்கள் கூடுமிடங்களில் பகிரங்கமாக இந்த வசனங்கள் ஒலிபரப்பப்படுகின்றன. ஆபாச வசனங்களும், செய்கைகளும், பாடல் காட்சிகளும் மக்களின் மனத்தைக் கெடுக்குமளவுக்கு 'முந்தானை முடிச்சி'ல் இடம் பெற்றுள்ளன. பாக்கியராஜ் போன்ற உண்மையிலேயே திறமையான மனிதர்கள் இந்த மாதிரி ஆபாசங்களினால்தான் புகழ் பெற வேண்டும் என்பதை நினைத்து என் போன்ற பாக்கியராஜ் ரசிகர்களுக்கு அவமானம்!
விழுப்புரம். கே. எஸ். குமார்.

'சிரிக்க முடியாத ஊர்' என்று பொருத்தமான தலைப்புடன், எங்களது ஊரின் குறைகளை நகைச்சுவையுடனும் இவ்வளவு தெளிவாகவும் யாராலும் எடுத்துக் கூற முடியாது! நீங்கள் சங்கை ஊதி விட்டீர்கள். விடிகிறதா எனப் பொறுத்து இருந்து பார்ப்போம்!
விருத்தாசலம்—1. எம். கிரிதரன்.

குண்டு கல்யாணம் பயணம் செய்த பல்லவன் பஸ் 'பிரேக் டவுன்' ஆகாமல் ஓடியதோ, எங்களுக்கு ஒரு அருமையான நகைச்சுவைப் பேட்டி கட்டுரை கிடைத்ததோ!
மீனாட்சிபுரம். எஸ். கணேசன்.

நல்ல விஷயங்களுக்குப் பயன்படுத்த வேண்டிய பொன்னான நேரத்தையும், விலைமதிப்பில்லாப் பக்கங்களையும், 'குண்டு கல்யாணத்தின் பஸ் பயணம்' போன்ற உபயோகமற்ற விஷயங்களில் வீணடிப்பது தேவைதானா?
வேலாயுதம்பாளையம். எம். சம்பத்.

'சுமங்கலி'யின் சுறுசுறுப்பை ஜெய மன்மதன்தான் மெச்சிக்கணும். எங்களுக்கு எப்போது படம் முடியும் என்றாகிவிட்டது. அறுப்பான படத்தைச் சுறுசுறுப்பான படம் என்று புருடா விடுகிறீரே நியாயமா?
அயன்புரம் ஏ. சத்தியநாராயணன்.

வீட்டிலே ராமன் விமரிசனத்தில் 'வித்தியாசமான ராதிகா' என கொட்டை எழுத்தில் பாராட்டிய விமரிசகர், அடுத்த பக்கத்திலேயே 'சுமங்கலி' பட விமரிசனத்தில், வித்தியாசமாக நடித்திருக்கும் எங்கள்




சிலுக்கைக் கண்டு கொள்ளவேயில்லையே! ஏன் இந்த ஓர வஞ்சனை?
சென்னை—35. சி. பூபால்சிங்.

கவிஞர் வில்லவனின் 'நகங்கியநத்தை' உடைந்த மனோரதங்களின் உண்மை வெளிப்பாடு. உள்ளக் குமுறல்களின் குமைச்சல் சித்திரம். இவரைப் போல் நற்படைப்பாளிகள்-பிரகரச் சூரியனின் வரவை எதிர்நோக்கும் இளைய தாமரைகள்.
சீர்காழி.
ஆயில்யன்.

அடுத்த மாதம் வெளிவரவிருக்கும் கல்லூரி மாணவர் சிறப்பிதழில் மாணவர்களின் படைப்புகளுடன் அவர்கள் புகைப்படங்களையும் வெளியிடுங்கள். சிறப்பாக இருக்கும்.
திருச்சி—17. எத்தல். ஆர். இளங்கோ.

நல்ல யோசனைக்கு நன்றி. மாணவமணிகள் தங்களது படைப்புக்களை அனுப்பும்போது, புகைப்படத்தையும் இணைத்து அனுப்பி வைக்கலாம். -ஆர்.

# மாலையில் பூத்தும் மலர்கள்

7

''பாலா....''

''ம்?''

''பா....லா....''

''ம்?''

''படிச்சிட்டிருக்கீங்களா?''

மெடிகல் ஜர்னலிலிருந்து பார்வையை உயர்த்திய பாலா சிரித்தான்.

''தூங்கறவனை எழுப்பி, தூங்கிட்டிருக்கியான்கிற மாதிரி என்ன கேள்வி இது டார்லிங்?''

''பாலா''

''இதோட மூணாச்சு... இன்னும் எத்தனை தடவை கூப்பிட உத்தேசம்?''

''நீங்க என்னன்னு கேட்டாத்தானே?''

''ஆல்ரைட்... என்ன கண்ணம்மா?''

''இன்னும் நாலு நாளிலே என்ன வருது சொல்லுங்க பார்க்கலாம்?''

''நாலு நாள்லயா? ம்ம்? இன்னிக்கு வெள்ளிக்கிழமை... சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் போனா புதன் கிழமை வருது.''

''கடவுளே! நான் அதைக்கேட்கலே...என்ன தேதி? அதைச் சொல்லுங்க...!''

''அட! தேதி தெரியணுமா? முதல்லியே அதைச் சொல்லக் கூடாதா? டுடே ஈஸ் ட்வெண்டி செகண்ட்... அப்படின்னா இருபத்தி ஏழு... இந்த சிம்பிள் கணக்கை நான் போட்டுச் சொல்லணுமா?''

அசிரத்தையுடன் பேசிவிட்டு பாலாஜி மீண்டும் புத்தகத்தில் கவனத்தைத் திருப்ப, கௌரி அவசரமாய் எழுந்து உட்கார்ந்து, படுக்கையில் மண்டி போட்டுக் கொண்டாள்,

சிவசங்கரி



''புதன்கிழமை...இருபத்திஏழுனு சொல்ல நீங்க வேணுமா... பாலா, இது என்ன மாசம்?''

''ஓ காட்? என்னாச்சு உனக்கு இன்னிக்கு? முதல்ல கிழமை, தென் தேதி, இப்ப மாசம்னு தொண தொணக்கறே? இது நவம்பர் மாசம்... போதுமா? ஆளை விடறியா?''

கௌரி கண்களை விரித்தாள்.

பாலா விளையாடுகிறாரா? இல்லை, நிஜமாகவே மறந்து விட்டாரா?

பார்த்தவரைக்கும் பாலாஜியின் முகத்தில் ஒரு வெற்றுத் தன்மையை மட்டும் புரிந்து கொள்ள முடிய, இது நாழிகை கொப்பளித்த உற்சாகம் ஊசி பட்ட பலூனாக வெடிக்க, காலை நீட்டி மறுபடி படுத்துக் கொண்டாள். பக்கத்து ஸ்டாண்டில் இருந்த பத்திரிகை ஒன்றை முகத்துக்கு நேராக விரித்துப் பிரித்துபாலாஜியின் பார்வையைத் தவிர்த்தாள்.



அவன்: சர்வர் வேலையை விட்டுடப் போறேன்.

இவன்: ஏண்டா?

அவன்: ஈ கூட நுழையாத ஹோட்டல்ல சர்வரா இருக்க ரொம்ப அவமானமா இருக்குடா! —சிவலட்சுமி

அந்த ஏமாற்றமும், சன்னமான எரிச்சலும் கஷ்டப்பட்டு அடக்கி வைத்திருந்த சிரிப்பைத் தலைதூக்கச் செய்ய, பாலாஜி கையை நீட்டி அவள் பாதத்தை லேசாக வருடினான்.

''என்னம்மா... வரிசையா நாள், தேதி, மாசம்னு கேட்டே? அப்புறம் எதுவுமே பேசாமப் படுத்திட்டே?''

பத்திரிகையைத் தழைக்காமலே கௌரி பதில் சொன்னாள்.

''ஒண்ணுமில்லே பாலா... விட்டுடுங்க... நீங்க சொன்ன மாதிரி வீண் தொண தொணப்புதான்... ஐம் ஸாரி....''

பாலாஜி எழுந்து அவள் அருகில் உட்கார்ந்தான்.

பத்திரிகையைப் பிடுங்கி அந்தப் பக்கமாகப் போட்டுவிட்டு, குனிந்து தலையை முட்டினான்.

கண்களைச் சிமிட்டிக் கொண்டு ''ஸில்லி கேர்ள்... நவம்பர் இருபத்தியேழாம் தேதிய நான் அவ்வளவு சுலபமா மறந்திடுவேனா? நம்ப ஏழாவது வெட்டிங் ஆனிவர்ஸரி டே — எனக்கு ஞாபகம் இருக்காதுன்னு நினைச்சே?'' என,

கௌரி சந்தேகத்துடன் நெற்றியை மடித்தாள்.

''ஹேய்...இதானே வேணுங்கறது. நான் நினைவு படுத்தினப்புறம், தனக்காவே ஞாபகம் இருக்கிற மாதிரி பேசறதுதானே வேணுங்கறது!''

''இத்தனை வருஷங்களா நான் எப்பவாவது கல்யாண நாளை மறந்திருக்கேனா டார்லிங்?''

''இல்லதான்... ஆனா, ஒவ்வொரு வருஷமும் பத்து, பதினைந்து நாள் முன்னாடியே வெட்டிங்டேயை எப்படிஸெலிப்ரேட் பண்ணலாம்னு பேச ஆரம்பிக்கிறவர், இந்த வருஷம் வாயத் திறக்காமலே இருந்தா, மறந்திட்டதாத்தானே அர்த்தம்?''

இல்லே, நிச்சயமாய் 'மறக்கவில்லே. வைரா இராபாத்திலிருந்து வரவழைத்த நாலு முத்து சரங்களையும் ஹிக்கிம்பாதம்ஸில் வாங்கின ஆர்ட் ட்ரஷர்ஸ் ஆஃப் தி வேர்ல்ட் புத்தகத்தையும் அழகாக பரிசுத் தாள்களில் சுற்றி நர்ஸிங்ஹோமில்வைத்திருக்கேண்டிபெண்ணே! வேண்டுமென்றே இந்த முறை உன்னைச் சீண்ட ஆசைப்பட்டு வாயைத் திறக்காமல் இருக்கிறேன். புதன் அன்று பரிசுப் பொருட்களைப் பார்த்துச் சின்னக் குழந்தை மாதிரி வியப்புடன் ''எனக்கா? எப்ப வாங்கினீங்க பாலா'' என்று நீ சந்தோஷிக்கப் போவதைப் பார்க்கத்தான் இத்தனை அழுக்கம்டீ பெண்ணே....

பதிலாக எதுவும் பேசாமல் குனிந்து முத்தமிட்டவனின் மார்பில்கையை வைத்துக் கௌரி உயர்த்தினாள்.

''என்ன ஸார் தாஜா? மறந்துபோனது நிஜம்தானே?''

பாலாஜி சிரிப்பு மாறாமலேயே **'ஆம்'** என்று தலை அசைத்தான்.

''தட்ஸ் பெட்டர்... சமர்த்தா ஒத்துக்கிட்டீங்களே... ஸாரி சொல்லுங்க, போனாப் போறதுன்னு மன்னிச்சிடறேன்.''

''ஸாரி.''

''அ...ஆ.. இப்படிச் சொன்னா ஒத்துப்பேனா? ஸாரி கௌரிம்மா... தெரியாம மறந்திட்டேன். இனிமே கண்டிப்பா ஆயுசு பூரா மறக்கவே மாட்டேன்... ப்ராமிஸ்னு சொல்லுங்க.''

பாலாஜி அவள் கன்னத்தோடு கன்னம் வைத்து,

''ஸாரிடா ராஜாத்தி... தெரியாம மறந்திட்டேன். இனிமே ஆஸ் லாங் ஆஸ் ஐ லிவ் ஒரு தரம்கூட மறக்கமாட்டேன்...ப்ராமிஸ்'' என்றவன் மென்மையாய்க் காதைக் கடிக்க 'ஆ' என்று சிணுங்கிய கௌரி குனிந்தவனின் கழுத்தில் கைகளைச் சுற்றித் தன்னோடு இன்னும் இறுக்கிக் கொண்டாள்.

''ஐ லவ் யூ பாலா....''

''ஐ லவ் யூ டூ கௌரி... வெரி மச்....''

''பாலா...''

''ம்?''

''அன்னிக்கு என்ன பண்ணலாம்? எப்படிக் கொண்டாடலாம்?''

''நீ சொல்லு.''

''லீவு போட முடியுமா?''

''கஷ்டம்: புதன் கிழமை ஆபரேஷன் நாளாச்சே...''

''பரவாயில்லே... சாயங்காலம் ஒடியன்லே சினிமாப் போயிட்டு....''

''சரி..''

''ராத்திரி டின்னரை கேலார்ட்ல சாப் பிட்டுவிட்டு....''

''சரி...''

''வீட்டுக்கு வந்து மொட்டை மாடிக்குப் போய்....''

''ஹா...போய்?''

தடக்கென்று தலையைத் தூக்கி பாலா, வினவ, கௌரி குறும்புடன் சிரித்தாள்.

''அன்னிக்கு பௌர்ணமி 'பாலா...''

''வாவ்! கௌரி கண்ணு! என்ன அதிசயம் இது! உனக்குக் கூட புத்தி செக்ஸியாப் போறதே! மொட்டை மாடிக்குப் போய்—

'இந்தக் காற்று வெளியிடை கண்ணம்மா
—நிந்தன்
காதலை எண்ணிக் களிக்கிறேன்'

பாடலாமா? ம்?... சொல்லு, சொல்லு. மாடிக்குப் போய்....''

அவன் தலை முடியில் விரல்களை விட்டுக் கௌரி செல்லமாய்க் குலுக்கினாள்.

''அந்த நிசப்தமான சூழ்நிலையிலே திருப் புகழ் பஜனை பண்ணலாம்னு சொல்லவந்தா''

மேலே பேச முடியாமல் கௌரி சிரிக்க, அந்தச் சிரிப்பு நொடியில் பாலாஜியையும் தொற்றிக் கொண்டது.

சினிமாப் பார்க்க வேண்டும், வெளியில் சாப்பிட வேண்டும், மிகுதி இரவை ஒருவர் கையைமற்றவர்பற்றிநிலவொளியில் அமர்ந்து கழிக்க வேண்டும் என்று எத்தனையோ ஆசை யுடன் கௌரி திட்டம் போட்டாலும், கடைசியில் செவ்வாய்இரவு சாதாரணத் தலைவலி, ஜலதோஷம் என்று நினைத்தது புதன் காலையில் பாலாஜிக்கு நூற்றி இரண்டு டிகிரி ஜுரமாகச் சற்றும் எதிர்பாராமல் மாறியதில் அடிபட்டுப் போனதுதான் நடந்தது.

முதல் நாள் பிரீஃப் கேஸில் மறைத்து வந்த பரிசுகளை மனைவியிடம் நீட்டி வாழ்த்தியவன் தொடர்ந்து 'ஸாரிடா' என, எதற்காக அவன் வருத்தப்படுகிறான் என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தவளாய் கௌரி, இது என்ன சின்னப்பிள்ளை மாதிரி — என்கிற பார்வை ஒன்றைப் பார்த்து, இதைக்கூட நான் புரிந்து கொள்ள மாட்டேனா என்கிற தினுசில் புன்னகைத்தாள்.

ஜுரமும் அசதியும் அதிகமாக இருக்க, நர்ஸிங்ஹோமுக்குப் போக முடியாமல் படுக்கையிலேயே பொழுதைக் கழித்தவன், இரவு அவன் தேவைகளைக் கவனித்துவிட்டு, ''தூங்கறீங்களா? விளக்கை அணைச்சிடட்டுமா பாலா?'' என்ற அவளை இறுக அணைத்து ''எத்தனை ப்ளான் போட்டே? எல்லாம் என்னால அவுட். ஸாரிம்மா'' என்று மீண்டும் வருத்தப்பட்டதும், கௌரி அவனை நெருங்கி உட்கார்ந்தாள். புருவங்களோடு விரலை ஓட்டினாள். அழுத்தமாகப் பார்த்தாள். சன்னக் குரலில் பேசினாள்.

''சாதாரண விஷயத்துக்கு இத்தனை தரம் நீங்க ஸாரி சொல்றப்போ நான் செய்த காரியத்துக்கு எத்தனை முறை ஸாரி சொல்லணும்னு யோசிக்கிறேன் பாலா?''

''புரியலே''

''ஒண்ணுமே இல்லாத அல்ப சினிமா, டின்னருக்குப்போகலேனு வருத்தப்படறதைப் பார்க்கறப்போ, நீங்க ரொம்ப ஆசைப் பட்ட குழந்தையை உங்களுக்குக் கொடுக்காம மூணு தரம் ஏமாத்தினதுக்காக, நான் எவ்வளவு வேதனைப்படணும்னு தோணுது பாலா... சொல்லுங்க, எவ்வளவு தரம் ஸாரி சொல்.....''

பாலாஜி அவளை முடிக்க விடாமல் முரட்டுத்தனமாகத்தன்பால் இழுத்து அணைத்தான்.

''ஹேய்... ஹேய்... என்ன எங்கேயோ போறே? எதுக்காக இத்தனை வருத்தம்? ம்?''

''இல்லே பாலா...ரொம்ப நாளா சொல்ல நினைத்ததைத்தான் இன்னிக்குச் சொல்றேன்.''

''அசடு.''

''உங்களைநான் ஏமாத்தறதுநிஜம்தானே?''

''அ....ச....டு....''

''நீங்க ஒத்துக்க மறுக்கறதால இது இல்லேன்னு ஆயிடுமா?''

''அ....ச....டு....''

''பதில் சொல்லாம அசடு அசடுன்னு?''

''பின்னே அசட்டுத்தனமா உளறினா, அசடுன்னு சொல்லாம?''



''சரி, உங்களுக்குப் பிடிக்கலேன்னு இந்த மாதிரி பேசலே.... ஆனா.. இன்னிக்கு நான் ரொம்ப சந்தோஷமா இருக்கேன்... இதை நீங்க நம்பணும்...''

''.......''

''ஹாஸ்பிட்டலுக்குப் போகாம இருபத்தி நாலு மணி நேரமும் என் கூடவே இருந்தது நான் எதிர்பார்க்காத போனஸ்.சந்தோஷமா இருக்கு.''

''ஆனாலும்? நீ என்னென்ன பிளான் போட்டே? மொட்டை மாடி, நிலா அப்படி இப்படின்னு!... ஒண்ணுமே நிறைவேறல, ஜுரத்தோட....''

''ஸோ வாட்? இந்த மாதிரி உங்க தோள்ல படுத்துக்கற சந்தோஷத்துக்கும் அதுக்கும் பெரிசா என்ன வித்தியாசம் பாலா? எல்லாம் மனசைப் பொறுத்தது இல்லையா? நீங்களும் நானும் மனப்பூர்வமா அப்படி நம்பறவங்கதானே?''

பாலாஜி அவளை அணைத்திருந்த பிடியை இறுக்கினான். வகிட்டில் முத்தத்தைப் பதித்தான். ''ஐ லவ் யூ...'' என்றான்.



☐ நிலக்கரி ரயில் இன்ஜினுக்கு மீண்டும் யோகம். அமெரிக்காவில் நிலக்கரி—நீராவி ரயில் இன்ஜினை மறுபடி உருவாக்குகிறார்கள்.

சுற்றுப்புறத்தை அசுத்தம் செய்யாதிருக்க இதில் சாம்பலைச் சேகரிக்கத் தனி இடம் அமையும். கரும் புகை கட்டுப்படுத்தப்படும்.

மூன்றாண்டுகளில் தயாராக இருக்கும் இந்த இன்ஜினால் அமெரிக்காவுக்கு ஏராளமான பெட்ரோலியம் எண்ணெயும் அந்நியச் செலாவணியும் மிச்சமாகும்.

இஞ்சின் டிரைவர் உட்கார்ந்தபடியே பட்டனைத் தட்டி இன்ஜினை இயக்குவார். நிலக்கரியை அடுப்புக்கு ஊட்டும் பணியை இயந்திரம் செய்து விடும். புதிய உத்திகளைக் கையாள்வதால்நிலக்கரி எரியும்போது கிடைக்கும் உஷ்ணம் அதிகரிக்கும். இரு மடங்கு பயன் தரும்.

ஆதாரம்: இந்து
—விசிறி.

இரண்டு நிமிஷங்களில் மீண்டும் கௌரி மெதுவாக ''பாலா'' என்றாள்.

''ம்?''

''பேச்சை ஆரம்பிச்சாச்சு; சும்மா இருக்க முடியலே... கேட்கட்டுமா? அந்த ஸ்டில் பார்ன் பேபிக்கப்புறம் நா ஏன் உண்டாகவே யில்லே பாலா?... விளையாட்டுப் போல வருஷம் மட்டும் மூணு ஆயாச்சு!''

கவலையுடன் அவள் பேசுவதாகப் பட, பேசியவளைத் தோளிலிருந்து மார்புக்கு பாலாஜி இழுத்து விட்டுக் கொண்டான்.

முகவாயில் விரலைக் கொடுத்துத் தூக்கித் தன் கண்களைச் சந்திக்க வைத்தான்.

''உண்டாகலேன்றது உன்னை உறுத்தறதா?''

''ம்....ரொம்ப....''

''இதான் தப்பு கௌரி... டாக்டர் ஒண்ணும் இல்லேன்னு சொல்லிட்டதை மறக்கலாமா?''—

''மறக்கலே... ஆனாலும் ஏன் உண்டாகலே? தேர் மஸ்ட் பி எ ரீஸன்... அந்தக் காரணத்தை நான் தெரிஞ்சுக்க விரும்பறேன்.''

அந்தக் குழந்தைக்குப் பின், ட்யூப் டெஸ்டிங், டி. அண்ட் ஸி இவளுக்குச் செய்ததோடு, பாலாஜியும் தன்னைச் சோதித்துக்கொண்டு விட்டான்.

''கர்ப்பப் பை கொஞ்சம் பலவீனமா இருக்கிறது. ஆனாலும் குழந்தை உண்டாவது இதனால் நிச்சயம் தடைப்படாது'' என்று ஒருத்தருக்கு இரண்டு டாக்டர்கள் கூறியும் அதன் பிறகு ஏனோ கருத் தரிக்கவேயில்லை.

''சொல்லுங்கபாலா...நான் ஏன் அப்புறம் ப்ரக்னென்ட் ஆகலே?''

பாலாஜி எழுந்து உட்கார்ந்து இரு கரங்களிலும் அவள் முகத்தை ஏந்திக் கொண்டான்.

''இது விஷயமா நானே உங்கிட்டப் பேசணும்னு இருந்தேன். நல்ல வேளையா நீ டாப்பிக்கை எடுத்திட்டே... குழந்தை வேணும்னு ரொம்பத் தீவிரமா இருக்கிறது நல்லது இல்லே கௌரி... இந்தத் தீவிரம் சைக்கலாஜிகலா சம்பந்தப்பட்ட நபரைப் பாதிக்கும். குழந்தை உண்டாகலேன்ற ஏக்கம் நம்மையும் அறியாம உன் மனசைத் தாக்க ஆரம்பிக்க, உடம்பிலும், மனசிலும் ஒரு இறுக்கம் உண்டாக, கருத்தரிக்கத் தாமதமாகும்... ஸோ, நீ உன்னைக் கொஞ்சம் நிதானப்படுத்திக்கணும்... ரிலாக்ஸ் பண்ணிக்கணும்... குழந்தை வரப்போ வரட்டும்னு எதிர்பார்ப்பு இல்லாமத் தளர்த்திக்கப் பழகிக்கணும்... சில மாதங்களாகவே ரொம்ப டென்ஸ்டா இருக்கற மாதிரி தோணித்து... நாம கற்பனை பண்ணிக்கக் கூடாது; கௌரி ரொம்பசென்ஸிடிவ் கேர்ள்னு அந்த நினைப்பை ஒதுக்கிட்டேன். இனிமேலாவது பீ ரிலாக்ஸ்ட்... என்ன கண்ணம்மா?''

ஒரு கணவனாக மட்டுமின்றி டாக்டராகவும் மாறி பாலாஜி பேச, குறுக்கே ஒரு வார்த்தை பேசாமல் அத்தனையையும்உன்னிப் பாய்க் கேட்டுக் கொண்ட கௌரி அவன் உறங்கிப்போய் வெகு நேரம் ஆகியும் அந்த வார்த்தைகளை அசை போட்டுக் கொண்டே இருந்தாள்.

(தொடரும்)

# வியர்க்குருவினின்று நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

## நைஸில் உபயோகியுங்கள்

## வியர்க்குருவினின்று விரைவில் நிவாரணம் பெறுங்கள்.






HTB-GLL/88C6

நைஸில், மருந்துக்கலவையுள்ள பவுடர் ஆகும். வியர்க்குருவின் எந்தவிதத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே விசேஷமுறையில் தயாரிக்கப்பட்டதாகும். டால்கம் பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவதனின்றும், பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது இது.

1. அளவுக்கு மீறிய வியர்வையைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது. 3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.




உடல் நலத்தின் உறைவிடம்

**க்ளாக்ஸோ**

"இமயா!''

சட்டென வெட்டுப்பட்டாற் போல் நிமிர்ந்தாள் அவள்.

அவளது நிமிர்வு அவனைத் தயங்க வைத்தது.

அவளது முக இறுக்கம் சற்றே சமனமாகிய போது அவன் மீண்டும் பேச முயன்றான். ஆனால் ''உங்களிடம்...'' என்று சொல்லி நிறுத்தி விட்டாள்.''

''இந்தத் தரம்...

''இந்தத் தடவை எதுக்காகன்னு நான் கேட்கப் போறதில்லே.. எவ்வளவு பணம்னு மட்டும் சொன்னால் போதும்.''

''இமயா!''

''மறுபடியும் என்ன? எனக்கு எந்த விளக்கமும் வேண்டாம். எவ்வளவு பணம் நான் தரணும்?''

''சாரி இமயா! உங்களுக்கு அவ்வளவு கஷ்டமாக இருந்தால்....''

அவள் பதில் பேசவில்லே. தன் கைப் பையை எடுத்து ஐந்து ரூபாயை எடுத்து வைத்தாள்.

''இந்தத் தடவை ஜெரிக்கல் ஸ்டாஃப் கிட்டே பத்து ரூபாயும், ஆபீஸர்ஸ் கிட்டே இருபது ரூபாயும் கலெக்ட் பண்றதா தீர்மானம்...'' அவன் பயந்தவாறே நயமாகக் கூறினான்.

இமயாவுக்கு அடிவயிற்றில் பகீரென்றது.

ஐந்து ரூபாய் என்றால் கணவன் கடுகடுப்பான். இரவு படுக்கப் போகும் வரை முணு முணுப்பான். இருளில் அவனது தழுவலில் அவள் சிரிக்கும்போது மன்னித்து விடுவான்.

பத்து ரூபாய் என்றால்...

. மாமியாரின் அனுமதி வேண்டும். வாய் நிறைய வசைமாரி பொழிந்து, அவள் பரம்பரையைச் சாடி, அவள் சம்பாதிக்கிற திமிரைச் சொல்லிக் காட்டி, அவள் ஊதாரித்தனத்தைக் குத்திக் காட்டிக் கொண்டே இருப்பாள். அடுத்த பத்து ரூபாயை அவள் இப்படி பார்ட்டிக்கோ, ஃபங்ஷனுக்கோ தந்துவிட்டு வரும்வரை அது நீடிக்கும். பிறகு புதிதாகக் கொடுத்துத் தொலைத்த பத்து ரூபாய்க்கான காரணம் ஆரம்பமாகிவிடும். இப்படியே அது தொடரும்.... தொடர்ந்து கொண்டே இருக்கும்.



தலைவலி... பெரிய தலைவலி.

மனத்தின் புண் ஊறிவிடப் பட்டுக் கொண்டே இருக்கும். ஆபீஸில் பணம் வசூல் பண்ணு வாங்களோன்னு பயம்... வீட்டில் பணம் தந்துட்டு வந்துட்டால் பயம்...

''பத்து ரூபாய் தர இத்தனை யோசனையா மேடம்?''

மற்றொரு ஐந்து ரூபாயை எடுத்து வைத்த இமயா, ஒரு சின்னக் கடூரமான பார்வையால் அவனை நிமிர்ந்தாள்.

அவன் சட்டெனப் பணத்தை எடுத்துக் கொண்டு 'தேங்க்ஸ்' என்றவாறே வெளியேறினான்.

இந்தச் சங்கருக்கு என்ன வந்தது? எதற்கெடுத்தாலும் வசூல், வசூல் என்று கிளம்பி விடுகிறானே... இவளைப் போன்ற பெண்களிடம் வேறு வந்து கழுத்தை நெரிப்பது போல் பணம் கேட்கிறான். பெரிய உபகாரி மாதிரி இப்படி முன்னே நிற்பதால், வேலை செய்யும் பெண்களுக்கு இவன் தலைவலியாய்ப் போய்விடுகிறான்.

''அம்மா! மானேஜர் கூப்பிடுகிறார்!'' ப்யூன் கடனே என்று கூறிவிட்டு நடையைக் கட்டினான்.

இமயா அவசரமாக 'சி' செக்ஷன் வழியாக மானேஜர் அறைக்குப் புறப்பட்டாள்.

வராந்தா வழியாகச் சுற்றிக் கொண்டு போவது தூரம் என்பதால் அந்தக் குறுக்கு வழியை அவள் தேர்ந்தெடுத்தாள்.

அவசரமாக நடந்த அவள் கால்கள் சற்றே தடைப்பட்டன. தன் பெயர் அடிபடுவதைக் கேட்டுச் சற்று நிதானித்தாள்.

''அப்பப்பா! இந்த இமயாகிட்டே பணத்தை வாங்கறதுக்குள்ளே நான் படற பாடு... சரியான இவடா அவ...''

# நோக்கி...




''ஆமாமாம்! பணத்தைத் தர மனசே வராதுடா...''

''இந்த மாதிரி ஆபீஸ் நிகழ்ச்சிகளுக்குத் தரமட்டும்தான் மனசு வராது அவளுக்கு. ஒண்ணும் தெரியாது, கையிலே சம்பளம் வாங்கினதும் புடவைக்காரரிடம் புடவை எடுக்கறதும், வளையல், சோப்பு, ரிப்பன், பவுடர் என்று வாங்கறது மட்டும் பரவாயில்லைபோலிருக்கு....''

''டேய்! இமயாடா!'' இவன் முறைப்பில் மெல்ல முணுமுணுத்தான் ஒருவன்.

''ஐயையோ!'' சங்கர் சத்தமில்லாமல் அலறினான்.

''அவளுக்கு நாம் பேசினது கேட்டிருக்குமோ?'' பயத்திலும் முணுமுணுப்பாகக் கேட்டான் டெஸ்பாட்ச் கிளார்க் ரங்கநாதன்.

''நிச்சயம் இருக்காது.''

வேறு ஏதோ பேசுவதைப் போல், அவளுக்குப் பாவனை காட்டிக் கொண்டு, அவளைப் பற்றியே அவர்கள் மெதுவான குரலில் பேசிக் கொண்டிருந்தபோது, இமயா, அவர்கள் அருகே வந்தாள்.

''மிஸ்டர் சங்கர்! கல்யாணமானதுக்கப்புறம் குடும்பக் கஷ்டம்னு என்னன்னு உங்களுக்குத் தெரியும். உங்க மனைவியும் எம்ப்ளாயிடா வந்து சேர்ந்தா, அவளும் ஆபீஸில் உங்களைப் போன்றவர்களுக்குப் பதில் சொல்ல முடியாமல் தந்துட்டு வர்ற பணத்துக்கு நீங்கள் கணக்குக் கேட்கும்போது என் நிலைமையும் புரியும். அதுவரையிலும் வம்பு பேசாமல்; எங்களைப் போன்றவர்களை இழுத்துப் பேசாமல் மரியாதை தருவீர்களா?''

''மேடம்...!'' குழறினான்.

''ஒன்றும் குழைய வேண்டாம். நாங்களும் ஆபீஸ் வேலை செய்யறோம். நீங்களெல்லாம் கண்ணுக்கு லட்சணமாய், சுத்தமாய் ஆபீஸ் வர்ற மாதிரி நாங்களும் வர வேண்டாமா? உங்களைப் போன்றவர்கள் டெரிவுல்லும், பாலியெஸ்டருமாய் விலை வருகிறீர்கள். நான் எனக்குத் தேவையான புடவைகளை வாங்கறது, உங்க கண்களை ஏன் உறுத்தறதோ?'' வெடுக்கெனக் கூறி விட்டு, மானேஜர் அறைக்குள் நுழைந்தாள். ஆத்திரத்தில் அவள் மேனி எங்கும் நடுங்கியது. இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது.

''என்ன இமயா! அவசரமாக அழைத்தால், முகத்துக்கு இன்னொரு 'டச்சப்' கொடுத்துட்டுத் தான் வருவீங்களா?'' குத்தலாக வந்தது கேள்வி.

''ஸாரி சார்! அப்படி யெல்லாம் இல்லை.''

''கதை பேச வேறு டேபிளுக்குப் போயிருப்பே... கேட்டால் சந்தேகம்பே... ப்யூன் உன்னைத் தேடிக் கண்டு பிடிச்சிருப்பான்.''

''இல்லை ஸார். வேணும்னா ப்யூனைக் கேளுங்கோ'' குபுக்'கெனக் கண்களில் அழுகை திரளக் கூறினாள்.

"போன மாதம் பைல்களை க்ளோஸ் பண்ணி உள்ளே அனுப்பிச்சோமே... அதுக்கு உயிர் கொடுக்கணும். இதோ, இந்த ஹெட் ஆபீஸ் பைலையும், அதையும் சரிபார்த்துப் புது ஸ்டேட்மெண்ட் ஒண்ணு தயார் பண்ணணும்."

"அந்த பைல்ஸ் எங்கே ஸார் இருக்கு?"

"ஹெட் கிளார்க் 'ரேக்'லேதான் இருக்கணும். அவரையும் கேட்டுடு... சந்தேகமிருந்தா மீண்டும் வந்து பார். வேலையை இன்னிக்கே முடிச்சாகணும்."

"எஸ் ஸார்!" என்றவாறே திரும்பிய இமயாவின் மனத்தில் இந்த ஹெட் கிளார்க்கை வேறு அடிக்கடி பார்த்துத் தொலைக்க வேண்டியிருக்கே என்ற எரிச்சலும் ஆத்திரமும் மண்டின.

ஹெட் கிளார்க் அமிர்தலிங்கம் கூப்பிட்டதும் டேபிளுக்கு வர்றதை விட, கூப்பிட்டதும் கம்பெனி கொடுப்பதில்தான் நன்னடத்தை சர்டிபிகேட் வழங்குவார். அவர் சொல்வதைத்தான் மானேஜர் நம்புவார்.

மனத்தில் பழைய காட்சியின் நிழலோட்டம் ஒரு நிகழ்ச்சியைக் காட்டி இம்சைப்படுத்தியது.

ஒரு நாள் பஸ் ஸ்டாப்பில் அவள் நிற்கும் போது அமிர்தலிங்கம் அங்கு வந்துவிட்டார்.

"இமயா! வாயேன் ஆத்துக்கு!" என்று சகஜமான ஒரு அழைப்பு வந்தது.

"இல்லே சார்! மாமியார் சீக்கிரம் வரச் சொன்னார். இன்னொரு நாள் வந்து மாமியைப் பார்க்கிறேன்."

"மாமி இப்ப ஆத்திலே இல்லே. கொஞ்ச நேரம் பேசிண்டிருக்கலாமேன்னு கூப்பிட்டேன். ஜஸ்ட் ஒரு ஹாஃப் அன் அவர்!"

இமயா நடுங்கிப் போனாள்.

அழைப்பின் பின்னால், ஏதோ ஒரு வஞ்சகம் ஒளிந்திருக்கிறது என்பதை நிதர்சனமாகப் புரிந்து கொண்டாள். புலியிடமிருந்து தப்பித்துக் கொண்ட மானின் மகிழ்ச்சி அவளிடம்.

· ஆனால் அந்தப் புலி தினம் தினம் இவளைப் பார்வையால் கொச்சைப்படுத்தி, பேச்சால் குத்திக் காட்டி, மறைந்திருந்து பாயத் தயாராகி நிற்பதைக் கண்டு கலங்கினாள்.

"அதென்ன கையிலே மூட்டை அத்தான்?"

"உங்க அப்பா அனுப்பிய டீ. வி. செட்டை கூட்ஸ் ஷெட்டிலிருந்து டெலிவரி எடுத்து வந்திருக்கேன்!"



கொஞ்சம் 'அட்ஜஸ்ட்' பண்ணிக்கொண்டு போக முடியாததால் மேலதிகாரிகளின் மறைமுகத் துன்புறுத்தல் எந்தெந்த ரூபத்தில் வரும் என்பதில்லை. அதைச் சமாளித்துக் கொண்டு, தன்னையும் காத்துக்கொண்டு தன் வேலையையும் காப்பாற்றிக் கொள்வதென்பது ஓர் அசகாய சூரத்தனம்தான்.

வீட்டில் ஐந்து மணிக்கு எழுந்து குக்கரை ஏற்றி, சமையல் முடித்து, துணிகள் துவைத்து; காயவைத்து, தனக்கும், கணவனுக்குமாய்ச் சாதம் பிசைந்து வைத்துக் கொண்டு கிளம்பும்வரை மூச்சு விட நேரமிருக்காது. இடையிடையே மாமியாரின் கடுகடுப்பு; மாமனாரின் நச்சரிப்பு. பணத்தை முதல் தேதி கைநிறைய வாங்கிக்கொள்ளும் போது மட்டும்தான் மாமியாரின் முகத்தில் ஒரு சிரிப்பு. அதை மாதம் ஒரு முறைதான் காண முடியும். அதன் பின் அவளை ஒரு விரோதியாகவே நடத்தும் கொடுமை. இந்த நிலையில் இவள் வாழ்கிறாளே என்றே புரியாத கணவனின் சிடுசிடுப்பு...

ஆபீஸில் ஐந்து மணியானால், காலையிலிருந்து அவள் செய்த வேலைகள் எதுவுமே இல்லை போல, கடைசியாக முடிக்க முடியாத வேலையை முக்கியமானதாக மானேஜர் சத்தம் போடுவார். அவர் கொடுக்க மறந்த ஒரு பைலை இவள் கொடுக்க மறந்ததாகச் சாடுவார்...

ஹெட் கிளார்க்கின் அறையை அடைந்த போது, அவர் வாயெல்லாம் பல்லாக இவளை வரவேற்றார். "என்ன வேண்டும்?"

மானேஜர் குறிப்பிட்ட பைல்களை அவள் தேடி எடுக்கும் நேரம் வரை, அவர் பார்வை தன் மேனியில் ஊர்ந்த வண்ணமே இருப்பதை உணர்ந்தாள்.

அவள் விடை பெறும்போது "சந்தேகமிருந்தால் என்கிட்டக் கேளு இமயா... கூச்சம் வேண்டாம்..." என்று அவர் சொற்களை முடிக்கு முன் "தேங்க்ஸ் சார்!" என்று சொல்லி வெளியேறினாள்.

உடம்பே முடியவில்லை. தள்ளாட்டம், தலை சுற்றல், சுகமாகப் படுத்திருக்க வேண்டும்போல் ஒரு சோர்வு.

"எழுந்து குளிச்சுட்டுக் கிளம்பு. எலுமிச்சம் பழ ரசம் வச்சிருக்கேன். குடிச்சியானா வாந்தி வராது. ஆபீஸுக்கு லேட்டாகலே...?" மாமியாரின் கண்டிப்பான அனுசரணை.

பஸ் ஸ்டாப்பில் அவளை ஸ்கூட்டரில் இறக்கிவிட்டு, வேறு திசையில் பறந்த கணவனுக்கு அவள் மேல் கோபம். அவள் மசக்கையைக் கொண்டாடாமல், கொன்றுவிடலாம் என்று அவன் தீர்ப்புச் சொன்னபோது, அவள் அடிபணியாமல் போன குற்றத்துக்காகத் தந்த தண்டனை அவனது மௌன விரதம். அவளுக்கோ தன் தாய்மைக் களிப்பை எண்ணி மகிழ முடியாத ஒரு சஞ்சலம்.

மானேஜர் ஏதோ கேட்டுக் கொண்டிருக்கிறார்.

"உடம்பு சரியில்லை சார்!"

"லீவ் போடறது. என் உயிரை எடுக்கறீங்க?"

"லீவ் இல்லை சார்!"

டிவி வைத்திருப்பவர்களில் சிலர் சொல்வது:

"4 வருஷங்களுக்கு முன்பு டிவி வாங்கினேன். இன்றைய வரை எந்தத் தொந்தரவும் இல்லை."

"கண்ணாடியில் முகம் பார்ப்பது போல என் டிவியில் படங்கள் தெளிவாகத் தெரிகின்றன."

"ஒலி மிகவும் துல்லியமாகக் கேட்கிறது என் டிவியில்"

"ஒரே ஒரு தடவைதான் என் டிவியில் ஏதோ கோளாறு ஏற்பட்டது. அதை அன்றைக்கே சரி செய்து தந்து விட்டார்கள்".

இந்த எல்லாப் பேச்சுகளையும் உண்மையாக்குவது

# கொனர்க் டிவி



# கொனர்க் டிவி

இதர டிவிகளில் இருப்பதையும் இல்லாததையும் இணைத்து அளிக்கிறது

கொனர்க் டெலிவிஷன் லிமிடெட் (ஒரிசா அரசாங்க நிறுவனம்) 'ஆர்த்தி சேம்பர்ஸ்', 189, மவுண்ட் ரோடு, சென்னை-600 006. போன்: 441551 'தி ஷோரூம்', கொனர்க் டிவி லேவல் ஹவுட், 4/1, லேவல் ரோடு, பெங்களூர்-560 001 போன்: 565640 'தி ஷோரூம்', கொனர்க் டெலிவிஷன், E-19, யூனிட்டி ஹவுஸ், அபிட்ஸ், ஹைதராபாத், 'தி ஷோரூம்', கொனர்க் டிவி, ஸ்ரீநாத் காம்ப்ளெக்ஸ், தாஜ் ஹோட்டல் எதிரில், எஸ்.டி. ரோடு, செகந்தராபாத். போன்: 820047.
கொனர்க் டிவி சர்வீஸ் சென்டர், ஹவுஸ் நம்பர் 7-4-621/414, சஞ்சீவ ரெட்டி நகர், ஹைதராபாத்-500 038 போன்: 262624

EP-KTV-111-83

# சமைத்து 4 மணி நேரங்கழித்துக்கூட மணம் கமழும் சூடான உணவை பரிமாற இக்ளு ஹாட் பேக் இப்பொழுது உங்களுக்கு உதவுகிறது




**மறுபடியும் சூடவைக்கும் வேலையே இல்லை**

சாதமானாலும் சரி, குழம்பு, கறி வகைகளானாலும் சரி, சமையலை சீக்கிரமே முடித்து இக்ளு ஹாட்பேக்கில் வைத்து மூடிவிடுங்கள். 4 மணி நேரம் கழித்து பரிமாறினாலும் உணவு சமைத்த சூட்டோடு, ருசியாகவும், சத்து மிக்கதாகவும் இருக்கும்.

**நேரமும் எரிபொருளும் மிச்சம்...**

ஏனெனில் உணவை மீண்டும் சூடாக்குவதை தவிர்க்கிறது. மேலும் உணவுச்சத்து இழப்பையும் இது தடுக்கிறது.

ஜெனரல் மர்ச்சன்ட்ஸ் கடைகளில் இக்ளு ஹாட்பேக் பல சைஸ்களில் கிடைக்கும்.
இன்றே ஒரு இக்ளு ஹாட்பேக் வாங்குங்கள் அதனால் பல விதத்திலும் லாபம்.
மேலும் அதிக ஓய்வு நேரம் கிடைக்கிறது

**இக்ளு ஹாட்பேக்கின் திறமைக்கு ஒரு சான்று**

தொடர்ந்து இரண்டு மாதம் இந்த ஹாட் பேக்கை சோதித்து பார்த்து சென்னை கேடரிங் இன்ஸ்டிட்யூட் கீழ்க்கண்ட சான்றுரையை வழங்கியுள்ளது.

"இது உஷ்ணத்தை நன்கு பாதுகாக்கிறது. அதே சமயம் உணவில் ருசிக் குறைவு ஒன்றுமில்லை. 8 மணி நேரத்திற்கு பிறகு கூட உணவின் மணத்தில் ஒரு குறைவும் ஏற்படவில்லை... இப்பெட்டிகள் திறன் மிக்கவை!"

**IGLOO hotpack**



**மேட்டூர் பியர்ட்ஸெல் லிமிடெட்டின்**

தரமான தயாரிப்பு

''எல்லாத்தையும் எடுத்தாச்சா? உங்களுக்காக இனிமேல் சட்டத்தையே மாத்தணும்... உங்களுக்கெல்லாம் காஷுவல் லீவ் பன்னிரண்டு நாள் போதாது. ஏன்; ரெண்டு மாசம் போட்டாலும் போதாது... அது போகட்டும்னு... பிரசவ லீவ் வேறே...!''

இமயா குன்றிப்போனாள்.

அவளது பூசிய வயிறும், பொன் மேனியும் அவமானத்தால் சிறுத்தன.

'டேய் பிரபு! நீயும் ஒரு தாயின் வயிற்றில் தான் பிறந்தேடா! தாய்மையைப் பழிக்காதேடா... பெண்ணை இழிவு படுத்தாதேடா!' என்று கதற வேண்டும் போல் வாய் பரபரத்தது.

ஆனால் கண்கள்தான் பொங்கின. நெஞ்சின் கமறல் உள்ளுக்குள்ளேயே அலையடித்தது. 'ஐயோ! எத்தனை நூறு கௌரவர்கள்!'

''உம்! அழுகை வேறு. ஏம்மா நீங்கல்லாம் ஆத்திலே ஆம்படையான் மடியிலேயே உட்கார்ந்து கொண்டிருக்கிறதை விட்டு, எதுக்கு ஆபீசுக்கு வந்து என் உயிரை எடுக்கிறேள்?''

''ஸாரி சார்!''

''சரி சரி! போய் ஹெட் க்ளார்க்கைக் கேட்டு வேலைய முடி.''

ஹெட் க்ளார்க்கிடமா? சிங்கத்திடம் தப்பி, புலியிடமா?

''ஏன் இப்படி அழுது வடியறே இமயா, மானேஜர் 'டோஸ்' விட்டாரா?'' என்று அவளை வரவேற்றார் அமிர்தலிங்கம்.

''எக்ஸ்க்யூஸ் மீ ஸார்! எங்க வாழ்க்கையிலேயும் பல ப்ராப்ளம்ஸ் இருக்கு சார்!''

''இருக்கட்டும். யார் இல்லேன்னு? வாழ்க்கைன்னு ப்ராப்ளம்ஸ் யாருக்கு இல்லேங்கறே? எல்லாத்தையும் அட்ஜஸ்ட் பண்ணிக்கப் பழகணும்..புரியறதோன்னோ?''

இரு பொருள்பட ஏதோ சொல்கிறாரே என்ற நடுக்கத்தோடு வெறுமனே தலையசைத்த அவள், ''சார்! அந்த பைல்ஸ்...'' என்று பேச்சை மாற்றினாள்.

''மானேஜர் சொன்னார். காலையிலேயே நீ வந்திருக்கலாம். இத்தனை நாழி வேலை முடிஞ்சிருக்கும்!'' அவர் முகத்தில் ஒரு பரவசக் கொஞ்சல். கண்களைச் சிறிதாக்கி மெல்லச் சிரித்தார். அந்தச் சிரிப்பு அவள் மேனியைத் துராக்கிருதமாக வருடி, பலவந்தமாக முதுகில் தட்டிக் கொடுத்தது.

அவள் அதை உணராதவாறு ''சொல்லுங்கள் சார்!'' என்றாள்.

அவர் விளக்கங்களைக் கேட்டதும் அவள் எழ முயன்றாள்.

''ஒரு விஷயமாச்சே? மாமி நாளைக் காலை காஞ்சிபுரம் போறா. நாளைக்கு செகண்ட் சாட்டர்டேதானே? அந்த பைலை ஆத்துக்கு எடுத்துண்டு வந்தியானா அரை மணியிலே வேலை முடிஞ்சுடும்!''

இமயாவின் உடம்பு நடுங்கியது.

இவர் என்ன சொல்கிறார்? கடவுளே;இது என்ன சோதனை?

''என்ன பதிலே காணோம்?'' அமிர்தலிங்கத்தின் குரல் அவளை உசுப்பியது.

அவள் அவமானத்தால் உடல் குறுக; மீண்டும் துரியோதனன் சபையில் நிர்க்கதியாக நிற்கும் பாஞ்சாலியைப் போல்..., மீண்டும்....

இவன் மறுத்து விடுவானோ என்ற நயவஞ்சகமான எண்ணத்தில் ''காலையிலே ஒன்பது மணிக்கெல்லாம் ஆத்திலே தயாராக இருக்கிறேன்... நிச்சயமா வந்துடு... காத்திண்டிருப்பேன்...'' வலியுறுத்தினார்,

தலையை அசைத்தாள்.

அலை கடலாக ஆர்ப்பரிக்கும் நெஞ்சைச் சமனப்படுத்த சட்டென வெளியே வந்தாள்,

எத்தனை சுறாமீன்கள்!

எத்தனை விதமாக ஒரு பெண்ணின் வாழ்வைச் சூறையாடத் துடிக்கின்றன.

தூக்கில் போடப் போகும் கைதியின் அச்சத்தில் மனம் வெருண்டது. சிங்கத்திடம் சிக்கிவிட்ட இரையின் படபடப்பு உடம்பைக் கிடுகிடுக்க வைத்தது.

எப்படி? எப்படி இவனைச் சமாளிப்பது? இரைக்கு அலையும் வேட்டை நாயாக இவன் பெண்களுக்கு அலைகிறான்.

ஓ! வரகவியே! எங்களை ஏன் பட்டம் சூட வைத்தாய்... சட்டங்கள் ஆள வைத்தாய்... கற்பு இருவருக்கும் பொதுவென்று வைத்ததை இன்னும் இவர்கள் பொருட்படுத்தவில்லையே....!

தாய்க்குலமோ மருமகளுக்கெனத் தன் நெற்றிக் கண்ணைத் திறந்து தீயால் பொசுக்குகிறது.

தந்தைக் குலமோ பார்க்கும் பிற பெண்களையெல்லாம் பெண்டாளத் துடிக்கிறது... இதில் பெண்மை எங்கே வெல்வது? பெண்மை எங்கே வாழ்வது?

ஓ! பாரதியே! உன் பாடல்களை இவர்கள் நெஞ்சு நிறைந்த சாக்கடையில் நீச்சலடித்தவாறே வாய் நிறையப் பாடுகிறார்கள்!... இதோ சற்று நேரத்தில் நிகழப் போகும் என் துர்மரணத்துக்கு யார் பொறுப்பாளி?

அது இந்த அலுவலகத்தின் மூன்றாவது மாடியிலிருந்தும் நிகழலாம்... எதிரிலே தெரியும் அலைகடலிலும் நிகழலாம்.

அதைத் தீர்மானிக்கும் சுதந்திரம் மட்டும் நிச்சயமாக எனக்கு இருக்கிறது!



டாக்டர்: ''ஸிஸ்டர்...! ஜுரம் அதிகமா இருக்கிற 'பேஷண்ட்' வாயிலே தெர்மாமீட்டரை அதிக நேரம் வைக்காதேன்னு சொன்னேனே, கேட்டியா...! இப்ப பாரு, உருகிடுச்சு..!'' -பி. எம். நடராஜன்

# இரும்பு குதிரைகள்

## பாலகுமாரன்

### அத்தியாயம் 36

ராவுத்தர் மலைத்துப் போனார்.

'பதினாறு வயசில் வியாபாரம் என்று இறங்கினபோது யாரிடம் காசு இருக்கும் என்று கண்டுகொள்வதே முதல் படிப்பினையாய் இருந்தது. ஆள் பார்த்து எடை போடுவது என்று ஒரு வழக்கம் வியாபாரிகளிடம் இருந்தது. பணம் இருப்பவர்-இல்லாதவர்க்கிடையே வேற்றுமை வெளிப்படையாய்த் தெரிந்தன. அந்த வேற்றுமை உருவத்திலோ அன்றி பேச்சிலோ இல்லை. பணம், வசதி முகத்தில் தனிக் களையாய்த் தெரிந்தது.

தன்னிடம் வேலை செய்த க்ளீனரே இன்று லாரி வாங்க வந்திருக்கிறான். தன்னிடம் உள்ள லாரியையே பேரம் பேச வருகிறான். நானும் இப்படித்தான் துவங்கினேன். மிலிட்ரி வண்டியை ஏலத்தில் எடுத்து மிலிட்ரி ஆளுக்கே கோட்டைக்கும் பரங்கி மலைக்கும் லோடு அடித்தேன். மிலிட்ரிக்காரன் சனிக்கிழமை தவறாது கணக்குத் தீர்ப்பான். யுத்த காலத்தில் துறைமுகம் பெரிதாக, ஹார்பர் லோடுக்கே வண்டிகள் தேவைப்பட்டன. பர்மா அரிசி இறக்கியே பணம் பார்க்க முடிந்தது.

ஆனால் இந்த உடைந்த வண்டியை வைத்துக்கொண்டு இந்த நேரம் இந்த க்ளீனர் என்ன வியாபாரம் செய்யு முடியும்?

போப்பாண்டவர் புனித ஜான் பால் எந்தத் தேசத்துக்குச் சென்றாலும் விமானத்தை விட்டு இறங்கியதும் தரையை முத்தமிடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்.

—ரேவதி



எஞ்சின் வேலையே பல ஆயிரம் ரூபாய் இருக்கும். வெறும் நாற்பதாயிரம் வைத்துக் கொண்டு என்ன விதமாய் வண்டி ஓட்டம் செய்யப் போகிறான்?

''இந்தா கௌசல்யா இதை எடு.''

''அப்படிப் பேசாத மொதலாளி,''

''ஒனக்கு இது சரிப்படாது. அதுனால சொல்றேன். வேறு எங்கினா பொட்டிக்கடை போடு.''

''நான்அப்பன்ஆயிஇல்லாதவமொதலாளி, உன் கடை வாசல்ல ஒதுங்கினவ மொதலாளி, மாட்டேன்னு சொல்லிடாதே.''

''நா இடம் பார்த்துத் தரேன். கடை போடு. லாரி வேணாம்.''

''நடேச மொதலியக் கேட்டுப் பாரு, நான்பொம்பளையாப் பொறந்துபட்டகஷ்டம் எல்லாம். எச்சச் சோறு கொண்ணாந்து சாப்டுவேன் மொதலாளி.''

''நாப்பது ரூபா கொண்ணாந்து குடுத்தா.'' நடேச முதலி அரிசி மூட்டையில் சாய்ந்து உட்கார்ந்தபடி கேட்டார்.

''வண்டி ஓடட்டும் மொதலியாரே. மாசா மாசம் துட்டு கட்டிர்றேன்.''

''வண்டி ஓடணும்னு மேல இருவது ரூபா செலவாகுமே.''

''அதுக்கு மார்வாடி இட்டக் கடன் வாங்கறம் மொதலாளி.''

''யாரு ஒனக்கு இருவது ரூபா கடங் குடுக்கறது?''

''காந்திலால் தரேங்கிறாரு. மூணு பைசா வட்டி.''

''எத நம்பித் தரான்?''

''வண்டி வாங்கி அவரண்ட அடமானம் வச்சிடப் போறோம்.''

''ரண்டு லட்ச ரூபா வண்டி வெலை; கௌசல்யா.''

''மாசம் நாலாயிரம் ரூபா குடுத்துர்றோம்.''

''பேர்பாதி காசாவது கொடுக்கணுமில்லே? நாப்பதாயிரம் எந்த மூலைக்கு?'' நடேச முதலி மறுபடி முனகினார்.

''மிச்சதுட்டுக்கு வேறபார்ட்டி பாக்கிறோம் மொதலாளி.''

''அவன் உம்முன்னு நிக்கிறான். நீயே வியாபாரம் பேசறியே''—ராவுத்தர் செல்லத் தம்பியைக் கை காட்டினார்.

''அதுக்குப் பேசத் தெரியலே. உன்னாண்ட வந்து நிக்கவே பயப்படுது.''

''பயம் என்னத்துக்கு?''

''வேலே பாக்கற எடத்துலயே வண்டி வாங்குற கூச்சம்தான்.''

''கூச்சம் என்ன... துட்டு குடுத்தா வண்டி.''

''நடேச மொதலி... நீ நடுவுல கடிக்கப் போட்ருத. நானும் பொம்பளேயா நிக்கணும்னுதான் மல்லாடறேன். எத்தினி நாளேக்குப் பாம்பே கோடவுன்ல ஆள் மாத்தி ஆள் மாத்தி ஒதுங்கறது.''

''அடடே... கௌசல்யா பத்தினியாய்ட் டாப்லியா?''

''இல்லாத கொறைதான் மொதலியாரே அவுசாரியாப் போனது. எனக்கும் ராவுத்தர் வூட்டுச் சாப்பாடும், இடுப்புல ராவுத்தர் கோடவுனு சாவியும்னு நானும் பத்தினிதான். பொம்பள உடம்பு நோவு ஆம்பிளேக்கு எப்படித் தெரியும்? தெரிஞ்சாத்தான் என்னு... ஐயோ பாவம்னு உட்ருவீங்களா?''

''ஒங் கதைய இங்க யார் கேட்டா? துட்டுக்கு வழி சொல்லு. பெரியவரு கடை பூட்டிட்டு மருதிக்குப் போவணும்.'' நடேச முதலி உரத்த குரலில் விரட்டினார்.

''நான் சொல்றேன் மொதலியார். ஒங்க காசு எங்கிட்ட இருக்கு. நான் கம்பெனி மூடப் போறேன். நஷ்ட ஈடாக் கொஞ்சம் போட்டு நாப்பது ரூபா தரேன். நீங்களும் இந்த வண்டில பங்கு போடுங்க.'' ராவுத்தர் பனிச்சென்று தன் ஜெநெதிதரிடம் திரும்பினார்.

''மொதலாளி....'' மேல் துண்டு நழுவ, நடேச முதலி எழுந்தார்.



''உங்களுக்கு ஆட்சேபணை இல்லேன்னு இதுக்கு ஒத்துக்கலாம்.''

''அதுக்கோசரம் இந்தப் பொம்பளை யோட.....''

''ஏன்? கௌசல்யாபேரிலஎன்னகோவம்?''

''ஒண்ணுமில்ல. கொஞ்சம் அடாவடி. ஆறு செல்லத்தம்பிய நம்பறேன். ஆறு மொதலாளி, கடை மூடிட்டா உங்களை விட்டுப் போயிடணுமா?''

''எங்க போப்போறேம் மொதலியாரே. எதிரும் புதிருமாத்தானே நடமாடப் போறேம்! நீங்களும் முன்னுக்கு வரணும் மொதலியாரே.''

''புரியலீங்க மொதலாளி. நான் இப்படியே கூலி ஆளா பொழுதை ஓட்டிடலாம்னு பாத்தேன்.''

''எனக்கு அதுல சம்மதமில்ல. நாளைக்கு ஊர் ஒரு மாதிரியா என்னைப் பேசும். ராவுத்தருக்கு ஒழைச்சே மொதலி கெட்டுப்போயிட்டான்னு சொல்லும். செல்லத்தம்பி முன்னாடி வா.''

செல்லத்தம்பி வெளிச்சம் படுகிற இடத்தில் வந்து நின்றான்.

''எனக்கு ஒன்னைத் தெரியாது. ரெண்டு லட்ச ரூபா வண்டி வியாபாரம் பண்றஅளவு ஒன்னோட விவரம் தெரியாது. நடேச முத யார் பங்குதாரராச் சேர்ந்தா வண்டி தாரேன். நாப்பதும் நாப்பதும் எண்பது. இன்னும் இருவது புரட்டி எடுத்துக்கிட்டு வா. எழுதி முடிச்சுடலாம். மிச்ச துட்டுக்கு எனக்கு கேரண்டி வேணும்னு நடேச முதலியைத்தான்நம்பமுடியும். என்னகௌசல்யா?''

ஒரு நாள் ஸ்ரீ ரமண மகரிஷி திருவண்ணாமலை மேல் ஏறி வந்து கொண்டிருந்தார். புதரால் மறைக்கப்பட்ட ஒரு குளவிக் கூட்டின்மேல் தற்செயலாய் அவருடைய பாதம் ஊன்றி அழுந்தியது. திரளான குளவிகள் பொங்கி எழுந்தன. ஸ்ரீ ரமணரின் பாதம் முழுவதும் மொய்த்துக் கொண்டு கொட்டத் தொடங்கின. அவர் உடனே தம்முடைய பாதத்தை அங்கிருந்து நகர்த்தவோ அகற்றவோ செய்யவில்லை. ''ஹிம்ஸை பண்ணியதற்கு இது வேண்டும். நன்றாய்ப் படு!'' என்று கூறியபடி அந்த இடத்திலேயே சற்று நேரம் நின்றார்!

—இ. வசந்தகுமார்



''மொதலியாரு என்னைநம்பலியே. கெட்ட பொம்பளை உக்காந்த எடம்னு பெருக்கிட்டுப் போற ஆளாச்சே.''

''மொதலாளி சொல்லுங்க — அதுக்குப் பதில் சொல்லு. உனக்கும் எனக்கும் உண்டானதை ஏன் பேசறே?''

''நான் கட்டுப்படறேங்க. வண்டி ஓடுச்சினு லாபத்தை மூணாப் பிரிச்சு, கடனை மூணு பங்கா வகுத்து மிச்சத்துட்டு சேத்துக்க நான் ஜவாப்தாரி.'' முதன் முதலாய்ச் செல்லத்தம்பி பேசினான்.

''மூணு ஏன் பிரிக்கறே? கௌசல்யா பங்கு என்னு....'' கரீம் பாய் வெட்டினான்.

''இருபது ரூபா — அது பங்கு. வண்டி ஓடறதுக்கு இருபது ரூபா அது செலவு. ஆக நாப்பது ரூபா அதுதுட்டு ஆச்சுங்க.''

''சரி போ. காலைல துட்டோட வா.'' ராவுத்தர் பேச்சை முடித்தார்.

''இருபது ரூபா எப்படிப் பொரட்டப் போவுது கௌசல்யா?'' நடேச முதலி, செல்லத் தம்பியைக் கேட்டார்.

''நீதான்என்னைப்பத்தினியாவிட்டியான்னு கேட்டியே. நாளைக் காலமலேர்ந்து பத்தினியாயிட்டாப் போவுது.''

கௌசல்யா பரபரப்பாய் இறங்கி இருளில் மறைந்தாள். காந்தி வீட்டு வாசலில் நின்று கடன் கேட்டாள். அவள் பெருக்குகிற கோடவுன் அத்தனையும் தேடிப் போனாள். பலபேர் கடையில் ஏறி இறங்கினாள். சிரித்தாள். இழைந்தாள். காலில் விழுந்து கெஞ்சினாள். சீட்டுப் பிடிக்கிறவனிடம் மன்றாடினாள்.

விடிகிற பொழுதில் பாம்பே கோடவுனில் யோசனையுடன் உட்கார்ந்திருந்த செல்லத்தம்பியின் மடியில் சுருண்டு விழுந்தாள்.

''இன்னிக்கு நான் வாங்கின கடனுக்கு மரியாதையா இருக்கணும்னு இன்னும் பத்து வருஷத்துக்கு நான் பத்தினியா இருக்கமுடியாதுய்யா.'' என்று அழுதாள்.

''போனால் போவுது போ.''

''போனாப் போவுதா? இன்னிக்குப் பேசற. நாளைக்கு வண்டி ஓடிச்சின்னு முழுக்கை சட்டை போட்டுக்கினு எச்சக்கலைன்னு என்னை அடிப்பே.''

''அப்புறம் என்னை யார் அடிக்கிறது?''

''ஏன்... என்னு?...''

''நான் எங்காத்தாள ஏமாத்தி வெத்துப் பேப்பர்ல கைநாட்டு வாங்கி அது நெலமும் வித்து துட்டு எடுத்தாந்திருக்கேன். அதுக்கும் யாராவது அடிப்பாங்கல்ல. ஆள் அடிக்காட்டியும் கடவுள்னு ஒருத்தன் அடிப்பானில்ல?''

''என்னய்யா சொல்றே?''

''எப்படியும் தண்ணித் தொட்டித் தெருவுல நீயும் நானும் பெரியாளா நின்னுடணும்.''

''ஐயே... அதை நெனைக்கிறப்பவே வவுத்தைக் கலக்கிக்கினு வருது.''

''ஏன் கௌசல்யா?''

''இந்த எச்சக்கலைய மடில வச்சிக்கினு அலையிறியே... எனக்கு என்னன்னே புரியலியே.''

''நாளைக்கு மறுபடி ஒருகேடு வந்து நான் ஜெயிலுக்குப் போனா இந்த எச்சக்கலைதானே டீத்தண்ணியோட கோர்ட்டுக்கு வரும்?''

''வாணும்...வாணும்... அது மட்டும் பேசாதே...'' கௌசல்யா அவன் வாயைப் பொத்தினள். செல்லத்தம்பி அவளைப் பேயாய் இறுக்கிக் கொண்டான்.

அன்பு காட்டுவதில் பத்தினிக்கும் பரத்தைக்கும் வித்தியாசம் என்ன? சுமை தாங்காமல் தள்ளாடுற ஆணின் பாரத்தைத் தூக்கி நிறுத்துகிறவளுக்கு என்ன பெயர்? ஆணின் சுயநலம்தான் பெண்ணின் ஒழுக்கமென்ருல் செல்லத்தம்பியின் 'போளுப் போவுது'க்கு என்ன அர்த்தம்? கற்பு சிலருக்கு நிர்ப்பந்தம். சிலருக்குக் கிடைத்த வசதி. சிலருக்குக் கௌரவம். கௌசல்யாவுக்கு இவையெல்லாம் எதிர்மறையா யிருப்பின் நீந்திக் கரையேறுவது எங்ஙனம்?

பரஸ்பர இரக்கம் மட்டுமே போதும் என்று ஆணும் பெண்ணும் முடிவு செய்த பிறகு மற்றவை வெறும் சடங்குகளே. மனிதரைத் தெரிந்து சடங்கை உதறத்தெரிந்தவர் வெகு சிலரே. செல்லத்தம்பிக்குக்கௌசல்யாவைத் தெரிந்து போயிற்று. அவள் இரக்கம் போதுமாய் இருந்தது.

**''என்மீது அதீத இரக்கமா உனக்கு.'' நான் உன்னை புழுங்குவது தெரிந்துகொண்டு நீயும் வேதனைப் படுகிருயா? இரக்கம் காதலாகுமா? அப்படியே காதல் என்கிற நினைப்பு தோன்றினுலும் வெளியே சொல்ல முடியுமா? சட்டென்று அந்த வார்த்தையை எப்படிச் சொன்னுய் காயத்ரி.**

''வீட்டிலே காலார நடக்கத்தோட்டமே இல்லையா?'' என்றுகாயத்ரி கேட்க ஆட்டோ பிடித்து கிண்டி காந்தி பார்க் காட்ட....

''ஒரு பெரிய கவிதை எழுதிக் காட்டறதா சொன்னேனே...''

''ம்ம்... எழுதிட்டேன்.''

''காட்டவேயில்லேயே...?''

''பேப்பர்ல இல்லே. மனசிலே இருக்கு.''

''சட்டுன்னுஎழுதிடவேண்டியதுதானே?''

''பாதிக் கவிதை மனசுலேதான் இருக்கு. எழுதி நோட்புக்கா வச்சுக்கத் தோணலே.''

''ஏன்?''

''என்ன மறுபடி கவிதையான்னு தாரிணி அலுத்துக்கலாம். அவ அலுத்துப்பாளேங்கற பயமே என்னை எழுத விடாம வச்சிருக்குன்னு நெனைக்கிறேன்.''

''எல்லார் வாழ்க்கையும் இப்படித்தானு? இல்லே, உங்களது மட்டும்தானு?''

''ஏன் கேக்கறே காயத்ரி?''

''நான் உங்கவீட்டுக்கு வந்தப்புறம்எனக்கு எல்லாம் குழப்பமா இருக்கு. மூச்சு முட்டற மாதிரி இறுக்கப் பிடிச்சுக்கிறதுதான் புருஷன் பெண்டாட்டி உறவான்னு பயமா இருக்கு.''

''தாரிணியைச்சொல்றியா?அவகுழந்தை.''

''இல்லே. குழந்தை மாதிரி வேஷம் போடறு.''

''வாட் டூ யூ மீன்....''

''ஐ மீன்.... அநேகம் பெண்கள் தாங்கள் மன வளர்ச்சி பெறுவதை விரும்பவில்லே. விவேகம் பெறுவதை விரும்பவில்லே. அடலெஸண்டாவே சாகறவரையில் இருக்கிறது சௌகர்யம்னு நெனைக்கிறு. 'எனக்கு என்ன



மைசூரில் உள்ளஹோஸ்கோட் என்ற இடத்தில் நடந்த நகராட்சித் தேர்தல்களில் தேர்ந்தெடுக்கப் படுபவர்கள் தங்கள் வீட்டிலிருந்து நாற்காலியையும் எடுத்துச் செல்ல வேண்டும். காரணம் 78-ல் தேர்ந்தெடுக்கப்பட்ட கவுன்சிலர்கள் நகராட்சியில் இருந்த மேஜை நாற்காலிகளைத் தங்கள் வீட்டுக்கு எடுத்துச் சென்று விட்டார்கள்!

நன்றி: டெக்கான் ஹெரால்ட்

—கணபதி சுப்பிரமணியம்

தெரியும். புருஷனைத்' தவிர குழந்தைகளைத் தவிர'ன்னு வேஷம் போடறதே நல்லதுன்னு நெனைக்கறு. அது ரொம்ப வசதியா இருக்கு.''

''வேஷம் போடாத பெண்கள்....?''

''என்னை மாதிரி அவஸ்தைப் படறது.''

''உனக்கு என்ன அவஸ்தை காயத்ரி?''

''யாரோடயும் ஒட்டாத ஒரு குணம். தனிமையில கரைஞ்சு போற குணம். தனி உலகம்.''

''எது பெட்டர்?''

''இனி அந்தக் கேள்வியே இல்லே. கேள்வி கேட்கத் தெரிஞ்ச பிறகு அடங்கிப் போறதுங்கறது இல்லே. சகலத்துக்கும் பணிய முடியாது. கொப்பு தவற விட்ட குரங்கா வெறிக்க வெறிக்க உக்காந்துக்க வேண்டியது தான்.''

''கொப்பு தவற விட்ட குரங்குன்னு.''

''மரத்துக்கு மரம் தாவறச்சே குட்டி கொப்பு தவற விட்டுதுன்னு குரங்குக் கூட்டம் அதைச் சேர்த்துக்காது. அடிச்சு விரட்டிடும். அப்படித் துரத்தப்பட்ட குரங்கு அந்தக் கூட்டம் போற இடத்துக்கெல்லாம் போகும். தூர உக்காந்து வேடிக்கை பாக்கும்.ஆயுசுபரியந்தமும்வேடிக்கைதான்.''

''ப்பா... கொடுமையில்லே இது?''

''தாங்க்யூ.''

''எதுக்கு?''

''என்னைப் புரிஞ்சுகண்டதுக்கு.''

''வெல். மனுஷா அவ்வளவு மோசமா? உனக்கும் யார் துணையாவது கிடைக்கும். கல்யாணம் ஆகும்.''

''கவிதை சொல்றேன்னேனே?''

(தொடரும்)

# பிரின்ஸிபால் வீட்டுக் கல்யாணம்!

ஊத்துக்கடவு ரவி

கட்டடிப்போம்!
கட்டடிப்போம்!
காலேஜுக்கு....

ஒரு அறிவிப்பு:

எக்காரணத்தைக் கொண்டும் செலுத்திய மொய்ப் பணம் திருப்பித் தரப் படமாட்டாது!













நமக்கு பின்னாலே வந்தவங்களுக்கு மட்டும் பந்தியிலே இடம் கிடைச்சுடுத்தே! அது எப்படி?


விஷயம் தெரியாமல் பேசாதே! அவங்க மாப்பிள்ளை கோட்டாவில் வந்தவங்க!


இவங்கெல்லாம் யாரு? சுத்தி சுத்தி வர்ராங்களே?
பக்கத்து இலையில் இருப்பதை யாரும் தெரியாம எடுத்து சாப்பிடாம பார்த்துக்கிறதுக்காக நியமிக்கப்பட்டிருக்கிற சூபர்வைஸர்கள்..


பொடிக்கடை ஆறுமுகம்....!
எஸ் சார்...!


நந்தம்பாக்கம் குமாரசாமி!
உள்ளேன் ஐயா!


புளியஞ்சேரி சுப்புணி
ஹியர் சார்!


இந்தப் பையை இப்போ பிரிச்சுப் பார்க்கக் கூடாது. மூணு பெல் அடிச்சப்புறம்தான் பார்க்கணும்

# தப்புக் கணக்கு

அன்னம்

அந்தப் பெரிய பங்களாவின் முன் வராந்தாவில் அவன் ஒரு மணி நேரமாக அமர்ந்திருந்தான். அவன் சட்டைப் பையில் ஒரு சிபாரிசுக் கடிதம். மனத்தில் எத்தனையோ கனவுக் கோட்டைகள்.

இது எத்தனையோ முற்றுகைகளில் ஒன்று. பல இடங்களிலிருந்து வந்த பேட்டிக் கடிதங்களுக்காக 'ஜெனரல் நாலட்ஜ்'புத்தகத்தை மனனம் செய்த பிறகு—கேட்ட கேள்விகளுக்கெல்லாம் 'டாண் டாண்' என்று பதில் அளித்த பின்னரும் கூட—அவனுக்கு வேலை கிடைக்கவில்லை.

வேலை வாய்ப்பு நிறுவனத்தில் 1980ம் வருஷம் பதிந்ததுதான். இதுவரை யாருமே அவனைக் கூப்பிட்டு அனுப்பவில்லை. ஆனால் இரண்டு மாதங்கள் முன்பு முதல் முறை பதிந்தவன் ஒரு மாதமாக வேலை பார்க்கிறான். யாரைப் போய்க் கேட்பது?...

இது அப்படியில்லை. ஒரு தனியார் நிறுவனம். யாரை வேண்டுமானாலும் போட்டுக் கொள்ளலாம். வேலை காலி இருப்பதாகப் பழைய உபாத்தியாயர் ஒருவர் மூலமாகத் தெரிய வந்தது. முதலாளி அவரிடம் படித்தவராம். மிகவும் உயர்ந்த முறையில் சிபாரிசுக் கடிதம் கொடுத்து அனுப்பியிருந்தார்.

ரவியின் மனத்தில் நம்பிக்கை வளர்ந்திருந்தது. இந்த வேலை மட்டும் கிடைத்து விட்டால்...? முன்பு வேலை பார்த்தவர் மாதம் எண்ணூறு ரூபாய் வாங்கிக் கொண்டிருந்ததாகக் கேள்விப் பட்டிருந்தான். அது கூட வேண்டாம். ஐந்நூறு அறுநூறு ரூபாய் கூடப் போதும்.

வீட்டில் அவன் அப்பா, அம்மா, தம்பி, தங்கை அத்தனை பேரும் தன் கையைத்தான் எதிர்பார்த்துக் கொண்டு இருந்தனர் என்பதும் அவன் அறிந்து வைத்திருந்ததுதான். அம்மா காலை முதல் மாலை வரை எவரெவர் வீட்டு அடுப்படியிலோ வெந்து மடிந்து, கொண்டு வந்த பணத்தில்தான் குடும்பம் நடந்தது. அம்மாவின் கைமணத்தை ஊரெல்லாம் புகழ்ந்தது. தடித்துத் தழும்பேறித் தீக்காயம் பட்டு உருக்குலைந்திருந்த அந்தக் கரங்களை அவன் பார்த்துக் கண்ணீர் வடித்திருக்கிறான். எப்போது அந்த அன்னைக்கு ஓய்வு? என்று தனக்காக — தன் குடும்பத்துக்காக மட்டும் — சமைக்கப் போகிறாள்?

அப்பா நல்லவர்!... பாசம் மிக்கவர்..., நன்மையைச் செய்யத் துடிப்பவர். விளைவு: மூன்று வருஷங்களுக்கு முன் ஆயிரம் ரூபாய் வருமானம் தந்த வேலையையும் இழந்து இரண்டு மாதம் சிறையில் அடைபட்டுத் திரும்பியிருந்தார் தியாகு. ஊருக்கு உபகாரி எனப் போற்றப்பட்டவர் இப்போது 'ஜெயிலுக்குப் போன தியாகு'வாகப் பெயரெடுத்து விட்டார்.

ஒரு நாள் மதியம் கூட வேலை பார்த்தவருக்காகப் பழைய ரிக்கார்டு ஒன்றைத் தேடப் போக — அந்த நண்பர்(?) அவர் மேஜையிலிருந்து சாவியை எடுத்துப் பெட்டியில் இருந்த மூவாயிரம் ரூபாய் பணத்தை எடுத்துச் சில நோட்டுக்களைத் தியாகுவின் டிபன் பாக்ஸில் போட்டு வைக்க — மாலையில் தியாகு மாட்டிக் கொண்டார். அப்போதும் அவர் யாரையும் சந்தேகிக்கவில்லை. வீட்டில்—பாங்கில் பணம் இல்லை. அத்தனையையும் எடுத்துப்போட்டு மைத்துனியின் கல்யாணத்தை முடித்துவிட்டிருந்தார். இங்கேயும் பரோபகாரம். முதலாளியின் மகன்— அமெரிக்கா சென்று படித்தவன். பழைய விசுவாசம், மனிதர்களின் தராதரம் எதை



யும் லட்சியம் செய்யாமல் போலீஸுக்குத் தெரிவிக்க...

நியாரு சிறைப் பறவை ஆனார்.

• • •

அவன் காத்திருப்பதை யாரும் கவனித்ததாகத் தெரியவில்லை. குறுக்கும் நெடுக்குமாக எத்தனையோ பேர் போனார்கள். கழுத்து வரை வெட்டப்பட்டிருந்த கூந்தலும், தொள தொளவென்று மாக்ஸியுமாக வந்த ஒரு பெண் வாயிலிருந்து 'டூத் பிரஷ்'ஷைக் கூட எடுக்காமல் யார் என்று விசாரித்தாள். ரவி தன் பெயரைச் சொல்ல, கையால் நாற்காலியைக் காட்டி உட்காரச் சொல்லி விட்டுப் போனாள். வராந்தாவைக் கூட்ட வந்த வேலைக்காரி, மொஸைக் தரையைத் துடைக்க வந்த பையன், நாற்காலிகளைத் தூசு தட்ட வந்த ஆயா — இவர்களுக்காகவெல்லாம் வழி விட்டு எழுந்தவன் அவர்கள் போன பிறகு உட்கார்ந்து காத்திருந்தான்.

உள்ளே ஏதோ ஒரு கடிகாரம் இனிமையான நாதத்தில் மணி ஒன்பது என்று சொல்லியது. ஊரிலிருந்து முதல் பஸ்ஸில்— ஐந்தரை மணிக்கு — அவன் புறப்பட்டிருந்தான். வெறும் வயிற்றுடன் போகிறானே என்று அவன் தாய் ஒரு தம்ளர் நீராகாரம் கொடுத்தாள். அது எப்படியோ ஆவியாகப் போய் விட்டிருந்தது.

வாசலில் கார் கொண்டு வந்து நிறுத்தப்பட்டது. வெளியே புறப்படுகிறாரா என்ன? பார்ப்பாரா, மாட்டாரா?... வேறு எங்கேயாவது வரச் சொல்வாரா?

கையில் ப்ரீஃப் கேஸுடன் அவர் வந்தார். நல்ல உயரம். தெளிந்த பார்வை. பணக்காரக் களை. இவனைப் பார்த்துக் கூப்பிட்டார்.

இவன் தன் சிபாரிசுக் கடிதத்தைக் கொடுத்தான்.

கடிதத்தின் கையெழுத்தைப் பார்த்ததுமே அவர் தோரணை மாறியது.

''சம்பந்தம் மாஸ்டர் கொடுத்து அனுப்பியதா?''

''ஆமாம்!'' என்றான் ரவி.

அவனை உட்காரச் சொன்னார். உள்ளேயிருந்து காப்பி வந்தது. ரவியினுடைய படிப்பு, மார்க், எல்லாவற்றையும் விசாரித்தார். கல்லூரியைப் பற்றிக் கேட்டார்.

பின்னர் தம் கைப்பையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து அருகிலிருந்த சிறு மேஜையைப்பக்கத்தில் இழுத்து ஏதோ எழுத முற்பட்டார்.

''உன்பெயர்என்னவென்று சொன்னாய்?''

''டி.ரவிச்சந்திரன்ஸார்.''

''அப்பா பெயர்?''



''வி. தியாகராஜன் ஸார்.''

அவர் நிமிர்ந்தார். மறுபடியும் சிபாரிசுக் கடிதத்தைப் பார்த்தார். ரவியையும் பார்த்தார்.

''தியாகராஜன்?.... மகாலட்சுமி என்டர்பிரைஸஸ்லே வேலையாக இருந்தாரே..''

ரவி 'ஆம்' எனத் தலை அசைத்தான்.

அவர் தம் பேனாவைத் திரும்ப மூடிக் கைப் பையில் வைத்தார். எடுத்த காகிதத்தைப் பெட்டியில் போட்டார். பெட்டியைப் பூட்டிவிட்டு எழுந்து கொண்டார்.

''சம்பந்தம் ஸாரிடம் சொல்லு: என்னால முடிந்ததைச் செய்கிறேன் என்று!''

காரில் ஏறிப் போய் விட்டார்.

ரவி உடனே வீடு திரும்பவில்லை. கால் போனபடிச் சுற்றினான். இரவு களைத்துப் போய்த் திரும்பினான்.

அவன் அம்மா வழி மேல் விழி வைத்துக் காத்திருந்தாள். அன்று சமைக்கப் போன இடத்தில் அவள் சாப்பிடுவதற்காக கொடுத்த ஒரு மைசூர்ப்பாகு, வடையுடன் அவனை உபசரித்தாள். ''என்ன ஆயிற்று?'' என்று கேட்டாள் தாய்.

''ஒவ்வொருவன் தன் அப்பா பெயரைச் சொல்லிக் காரியத்தைச் சாதித்துக் கொள்கிறான். நான் என் அப்பா பெயரைச் சொல்லாவிட்டாலும் அவர் 'பெயர்' — அவர் 'புகழ்' எல்லாவற்றையும் கெடுத்து விடுகிறது'' என்றான் ஆத்திரத்துடன்.

''பேசாமல் இருடா... அவர் ஏற்கெனவே நொந்து போயிருக்கிறார்'' என மெல்லக் கடிந்து கொண்டாள் தாய்.

''உம்... என்னை அடக்கு... இதேபோல் போனால் நானும் ஒரு நாள் பணத்தைத் திருடிவிட்டு ஜெயிலுக்குப் போகப் போகிறேன், பார்!'' என்றான் ரவி.

அவன் கன்னத்தில் விழுந்தது 'பளார்' என்று ஒரு அறை. அடுத்த கணம் அவனது தாய் முகத்தைக் கைகளில் புதைத்தபடி விம்மி விம்மி அழுதாள்.

''இந்த வயசிலேயே உனக்கு வாக்கிங் ஸ்டிக்கா?''

''நானும் என் தம்பியும் பாகப்பிரிவினை செய்துகொண்டதில் என் பங்குக்குக் கிடைத்த குடை மாமா இது!''



மறுநாள் தியாகுவைக் காணவில்லை. ரவி பதறிப்போனான், ஏதாவது விபரீதமாகச் செய்து கொண்டுவிடப் போகிறாரோ என்று, இரண்டு நாட்கள் எதுவும் தெரியவில்லை.

மூன்றாம் நாள் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து தகவல் வந்தது. இதுவரை வாய் மூடி மௌனியாக இருந்த தியாகு, தன் தாழ்விற்கும் அவமானத்திற்கும் காரணமாக இருந்த — அந்த நண்பனைத் தெருவில் நையப் புடைத்து, எலும்பை உடைத்து ஆஸ்பத்திரியில் தள்ளி விட்டார். அவன் அடி உதை தாங்காமல் உள்ளதைஉள்ளபடி— நடந்ததை நடந்தபடி — சொல்லிவிட்டான். தியாகு மறுபடியும் மூன்று மாதங்கள் சிறை வாசம் புறப்பட்டு விட்டார்.

அன்று தியாகுவின் பெயருக்கு ஒரு கடிதம் வந்தது. ரவி யாரிடம் வேலை தேடிச் சென்று காத்திருந்தானோ அவர் எழுதியிருந்தார்.

''அன்புள்ள ஐயா,

என்னை உங்களுக்கு நினைவு இருக்காது. பத்து வருஷங்களுக்கு முன் என் 'பிஸினஸ்' பெருத்த நஷ்டம் அடைந்ததால் — எலெக்டிரிக் டிரெயினில் தலை கொடுக்க இருந்த என்னை இழுத்துப் பிடித்துக் காப்பாற்றினீர்கள். தங்கள் கம்பெனிக்கு அழைத்துச் சென்று உங்கள் முதலாளிக்கு அறிமுகப் படுத்தி 'ஆர்டர்' வாங்கிக் கொடுத்தீர்கள். உங்கள் கைராசி நான் இப்போது நல்ல நிலையில் இருக்கிறேன். என் கடைசிப் பையனுக்குக்கூட உங்கள் பெயரைத்தான் வைத்திருக்கிறேன்.

நடுவில் உங்களுக்கு ஏற்பட்ட சிரமம் பற்றி அறிந்தபோது துடித்துப் போனேன்.

அந்தச் சமயம் உங்கள் திறமைக்கேற்ற இடம் என்னிடம் காலியாக இல்லை. ரவி போன மாதம் வந்திருந்தபோது சம்பந்தம் ஸார் கடிதத்தைக் காண்பித்தான். அவனுக்கு எதற்கு சிபாரிசு? உங்கள் பெயரைச் சொன்னால் போதுமே!

காலியாக இருந்த வேலையை அவனுக்குத் தரலாமென்றுதான் முதலில் நினைத்தேன். அப்படித் தந்து விட்டால் — உங்களிடம் நான் பட்ட நன்றிக் கடன் அடைந்துவிடுமோ என்ற பயம் வந்தது. இந்த விஷயத்தில் கடனைத் தீர்த்துக் கொள்ள நான் விரும்பவில்லை. என் உயிருள்ள வரை உங்கள் ''கடனாளி''யாகவே இருக்க ஆசை. ஆகவே யோசித்தபடி புறப்பட்டு விட்டேன். ரவி என்னைப் பற்றித் தப்பாக நினைத்திருக்கலாம்.

இத்துடன் ஒரு கடிதம். என் நண்பரின் கம்பெனி. அயல் நாட்டுச் சம்பந்தம் உடையது. ரவிக்கு ஆயிரம் ரூபாய் சம்பளத்தில் வாய்ப்பு அளிப்பதாகவும் வரும் ஜனவரி மாதத்தில் ஜெர்மனிக்கு அவனைப் பயிற்சிக்கு அனுப்புவதாகவும் உறுதி கூறியிருக்கிறார். ரவிக்கு என் நல்வாழ்த்துக்கள்.

தம்பி மனோகரன்''

ரவி படித்தான். அவன் கண்களிலிருந்து இரண்டு நீர் கடிதத்தின் வாசகத்தைக் கரைத்தபோது நெஞ்சம் தந்தையின் உயர்வையும், அவன் தப்புக் கணக்கையும் உணர்த்தி அவனைத் தலை குனியச் செய்தது.

# நீங்கள் விரும்பும் அம்சங்கள் அனைத்துமுள்ள உலகப்புகழ் பெற்ற டூ-இன்-ஒன்கள்



## அத்துடன் பிலிப்ஸின் உத்தரவாதம்!

உயர்தரமான இயக்கத்திற்கு உத்தரவாதமும், பிலிப்ஸ் வழங்கும் ஒப்பற்ற சர்வீஸ் பெறும் உறுதியும். கேட்டுப் பாருங்கள் பிலிப்ஸ் வைத்திருப்பவர் எவரை வேண்டுமானாலும். இந்த உறுதியை வேறு எவருமே அளிக்க முடியாது.

**புதிய 115**

முற்றும் நவீன 2 பாண்ட் ரேடியோ ரெக்கார்டர். மிக உன்னதமான MW மற்றும் SW இயக்கம். 1.4W அவுட்புட். கண்டென்சர் மைக்ரோஃபோன். ஆட்டோமாடிக் ரெக்கார்டிங் லெவெல் கண்ட்ரோல். துல்லியமான ஒலித்தரம். வடிவமைப்பு, ஆஹா, கொள்ளை அழகு!

**AR 197**

மற்ற அம்சங்கள் அனைத்துடனும் ஒரு இணையற்ற 'மிக்ஸிங்' வசதி; டேப் பாதுகாப்பு வசதி மற்றும் முழுமையான ஆட்டோ ஸ்டாப். பணத்திற்கு பிலிப்ஸ் வழங்கும் மதிப்பு தான் எவ்வளவு உயர்ந்தது!

**AR 107**

பிலிப்ஸ் டெக்னாலஜி வழங்கும் உயர்தரமான வசதிகள் அனைத்துடனும், 1400 mW ம்யூஸிக் பவர் அவுட்புட் பெறுவீர்.

**AR 508**

இந்தியாவின் முதன்முதல் ஸ்பேஷியல் ஸ்டீரியோ ரெக்கார்டர்—பரவலான ஸ்டீரியோ ஒலி வெள்ளத்தை அளிக்கும் வகையில் டிசைன் செய்யப்பட்டுள்ளது. 6.5W மொத்த ம்யூஸிக் பவர். 'பாஸ்' மற்றும் 'ட்ரெபிள்' இரண்டுக்குமே ட்யூயல் டோன் கண்ட்ரோல் சக்திவாய்ந்த ரேடியோ—ஸ்டீரியோ, FM இயக்க வசதியுடன்.



ஃபெர்ரோ கேஸட்டுகள்






# பிலிப்ஸ்

பிலிப்ஸ்—50 ஆண்டுகளுக்கும் மேலாக இந்தியாவில் இல்லங்களெங்கும் முழங்கும் நம்பகமான பெயர்.

CASPRR.10-202 TAM



மாமா : என்ன ஓய்! கையிலே எதும்பை வச்சிண்டு திரிதண்டி சந்நியாசி மாதிரி நிக்கறீர்?
அப்பா : இதெல்லாம் உம்ம வேலையாத்தான் இருக்கணும்!

# மாறுதல் வரும்

## சுஜாதா

### வாசல்

ஒரே ஒரு நாள்தான் மாமா வந்து விட்டுப் போகிறார் என்றாலும் அந்த ஒரு நாளைக்குள் வீடே அல்லோல கல்லோலப்பட்டுப் போகும். ஆட்டோ டிரைவருடன் சண்டையில் ஆரம்பித்து, பவானியின் காதல் பிரச்னையைத் தீர்த்து வைப்பது வரை அவருக்கு மேலேமேலே எத்தனையோ காரியங்கள்! அப்பாவுக்கு மட்டும் அவரைக் கண்டால் அலர்ஜி. சரியாக ஓடும் கடிகாரத்தையும் தம் ஸ்கூட்டரின் கார்புரேட்டரையும் ரிப்பேர் செய்கிறேன் என்று, ஒரு கை பார்த்து விடுவாரே என்பதால் கலக்கம் அண்ணாவுக்கு வாய்க்கும் பிடித்ததாகச் சமைத்துப் போடுவதில் அம்மாவுக்குத் திருப்தி. குழந்தைகளுக்கு அவர் சொல்லும் கதைகளில் மோகம், செய்து காட்டும் வித்தைகளில் பிரமிப்பு. மாமா ஒரு அலாதியான கேரக்டர்தான்!

### பகுதி 3

நாணு (கையில் இறந்த ஈயை ஏந்தி வந்து): மாமா, இதப் பாருங்கோ.

மாமா (அதை வாங்கிப் பார்த்து): நிஜமாவே மூங்க அடிச்சுட்டியா?... அழகாகக் கொலை பண்ணிட்டியே! பேஷ். இப்ப எல்லாரும் டாருங்கோ. இந்த ஈ செத்தது தானே (அதைஒருகாகிதத்தில் ஜாக்கிரதையாகஎடுத்து வைத்து) ச்ச்ச்! 'டெத் பை ட்ரௌனிங்!' செத்துப் போச்சு. இதைப் பொழைக்க வெக்கலாமாடா! ஸ்வாமி படத்திலேருந்து கொஞ்சம் விபூதி எடுத்துண்டு வா. (அவன் போக) ஈயே! கல்ப கோடி ஜன்மங்கள் எடுத்து இன்னித் தேதிக்கு ஈயா வந்து பொறந்து தண்ணில முங்கிச் செத்துப் போயிருக்கியா! பரவாயில்லே. ஈசுவரன் அருளால் உனக்கொரு ஜன்மம் தர ஏற்பாடு செய்கிறேன். (சம்ஸ்கிருதத்தில் கண்ணை மூடிக் கொண்டு ஏதோ சொல்கிறார். நாணு விபூதி கொண்டு வர, அதை ஈயின் மேல் தூவுகிறார்.) இப்பப் பார் நடக்கிறதை.

(எல்லோரும் ஈயையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்க)

பவானி (குரல்): மந்திரமும் இல்லை, தந்திரமும் இல்லை. அந்த ஈ தண்ணீருக்குள் மூங்கி உடம்பெல்லாம் ஈரம் ரொம்பிப் போய் ஒருவித மயக்கத்தில்தான் இருந்திருக்கிறது. விபூதி பட்டு அதன் ஈரம் உறிஞ்சப்பட்டதும், மறுபடி அது நினைவு வந்து பின்னங்கால்களைத் தேய்த்துக் கொண்டு 'நான் எங்கிருக்கிறேன்' என்று சொல்லி விட்டுப் பறந்து போயிற்று!

• • •

(எல்லோரும் 'ஐ' என்று ஈ பறந்து செல்லும் பாதையைக் கண்ணால் தொடர)

மாமா: எப்படி? செத்துப் பொழைச்சுதா இல்லையா?

நாணு: பூனைக் குட்டியைப் பொழைக்க வெப்பீங்களா மாமா?

மாமா: அந்த வித்தை எனக்கு இன்னும் சித்தியாகலை. அடுத்த தடவை வர்றப்ப பண்ணிக் காட்டறேன். இப்பப் பூனையைப் பிடிக்க ஓடிப்போயிடாதே, நீ. (சட்டென்று) உம், உம், எல்லாரும் ஸ்கூல், காலேஜுப் பார்க்கப் போங்கோ... உம்!

(நாணுவைத் தவிர மற்றெல்லாரும் செல்ல) நான் சாப்ட்டுட்டு கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துண்டுட்டு சாயங்காலம் இன்னும் நிறைய ஜாலமெல்லாம் செஞ்சு காட்டறேன். டேய் நாணு, யாராவது மெடிகல் காலேஜ் படிக்றவா இருந்தா, அவாகிட்டேருந்து எலும்பு வாங்கிண்டு வா. சயத்தைத் தங்கமாய்ப் பண்ணிக் காட்டறேன்.

(எல்லோரும் வியப்புடன் உள்ளே சென்று, ஸ்கூலுக்கும் காலேஜுக்கும் புறப்படுகிறார்கள். ஒரு இளைஞன் உள்ளே நுழைந்து, பையில் சாமான்களுடன் நாணுவை நிறுத்துகிறான்.)

இளைஞன்: நாணு, இதை உங்கம்மாகிட்ட கொடுத்துருப்பா. சர்க்கரை இந்த வாரம் ரேஷன்ல கொடுத்தாங்க. அப்பறம் கரண்ட் பில்லு கட்டியாச்சுன்னு சொல்லு.

(நாணு 'தாங்க்ஸ்' என்று சொல்லிப் பையை வாங்கிக் கொண்டு உள்ளே செல்ல, மாமா இளைஞனை ஏற இறங்கப் பார்க்கிறார்.)

மாமா: நீதானா அது? (இளைஞன் தன் நகத்தைப் பார்த்துக் கொண்டு அசடு வழிகிறான்). நேரே நில்லேன். ஏன் கூனல் போடறே?

இளைஞன்: பார்டன் ஸார்?

மாமா: இங்கிலீஷ் பேசாதே. நீதானே பவானி கிட்டக் காதல் பண்றே?

இளைஞன்: சார்...

மாமா: உம் மூஞ்சியைப் பார்த்தாலே தெரியறதே. இல்லேன்னா, எதுக்கு இந்த வீட்டுக்குச் சர்க்கரை, முந்திரிப் பருப்பு, கிருஷ்ணாயில் எல்லாம் வாங்கிண்டு வரே! அப்புறம் மூஞ்சிலே கான்ஸ்டிபேஷன் மாதிரி ஒரு களை. நிச்சயம் காதல்தான். வா, உன்னைப் பார்க்கலாம். (அவனைச் சற்று அருகில் வந்து பார்த்து) நிமிர்ந்து நில்லு. கூனல் போடாதே. என்ன செய்யலாம்னு இருக்கே?

இளைஞன்: சார்.... வந்து.... சினிமாக்குப் போய்ட்டு, மார்னிங் ஷோ போயிட்டு...

மாமா: நான் அதைச் சொல்லலே. பொழைப்புக்கு, உயிர் வாழறதுக்கு.

இளைஞன்: எங்கப்பாரு கடை இருக்குதுங்க.

மாமா: என்ன கடை?

இளைஞன்: அது இருக்குதுங்க. ஆர்ட்வேர் ஷாப்பே மூணு. நல்ல வசதிதான். (மாமாவின் கையைப் பிடித்துக் கொண்டு) ஐயா, நான் உங்க வீட்டுப் பொண்ணை மனப்பூர்வமாக் காதலிக்கிறேங்க. நீங்கதான் எப்படியாவது வழி சொல்லணும். உங்களைச் சந்திக்கிறதுக்குத்தாங்க வந்தேன். பவானி சொல்லி அனுப்பிச்சு. அதும் என்கிட்ட மனசைப் பறி கொடுத்துருச்சுங்க.

மாமா: வேற ஒண்ணையும் பறி கொடுக்கலியே?

இளைஞன்: ஐயா, என்ன சொல்றீங்க? நான் ரொம்ப நல்ல குடும்பத்துப் பிள்ளைங்க.

மாமா: இதப் பாரு. ஜாதி விட்டு ஜாதி கல்யாணம் செய்து கொடுக்க முதல்ல உங்கப்பாவைத் தயார் பண்ணு.

இளைஞன்: எங்கப்பா ஒத்துக்க மாட்டாருங்க. ரொம்பக் கோபிப்பாருங்க. அவரு

மாமா: டெத் பை ட்ரௌனிங்! செத்துப் போச்சு! இதையும் பொழைக்க வைக்கலாமாடா! ஸ்வாமி படத்திலிருந்து கொஞ்சம் விபூதி எடுத்துண்டு வா!

புகைப்படங்கள்: ரங்கேஷ்



எனக்குத் திருக்காட்டுப்பள்ளில பொண் பார்த்து வெச்சிருக்காருங்க. ஏகப்பட்ட டவுரி பேசியிருக்காருங்க. இவங்கப்பாவும் ஒத்துக்க மாட்டாரு. நிச்சயம் வீட்டை விட்டுத் துரத்திருவாங்க. ஆதாங்க சிக்கல். ஐயா, நீங்கதான் ஏதாவது வழி சொல்லணும். முதல்ல இந்தக் குடும் பத்தைச் சம்மதிக்க வைக்கணும். உங்களைப் பத்திப் பவானி சொல்லிச்சு.

மாமா (அவனையே பார்த்தவாறு யோசித்து) ம்?... ரொம்பச் சிக்கல்தான்... அது என்ன, பார்க்கர் பேனாவா?

இளைஞன்: ஆமாங்க. (சட்டென்று பையிலிருந்து எடுத்து) இந்தாங்க. எடுத்துக்கங்க – வெச்சுக்கங்க.

மாமா: தாங்க்ஸ்!....) தொடர்ந்து) சட்டை என்ன, ஃபாரீனு? எனக்குச் சரியா இருக்குமில்லே இது? (அவன் கழற்றிக் கொடுக்கிறான். அதையும் வாங்கிக் கொண்டு) தாங்க்ஸ்! உம், உங்காத்தில சின்னதா டேப் ரிக்கார்டர் இருக்கா?

இளைஞன்: ஏராளத்துக்கு இருக்குதுங்க. கொண்டு வரட்டுமா? ஃபாரின் சாமான்க கொட்டிக் கிடக்குதுங்க.

மாமா: அதெல்லாம் அப்புறம் பாத்துக்கலாம். என்ன வயசு உனக்கு?

இளைஞன்: இருபத்திரண்டு ஆயிருச்சங்க. பவானிக்குக் கூட பதினெட்டு ஆயிருச்சங்க.

மாமா: உங்க ரெண்டு பேர் பிரச்னையையும் தீர்த்து வைக்க ஒரே வழி... உம்... எங்கே காலைக் காட்டு பார்க்கலாம். (என்று அவன் பாண்டை உயர்த்திப் பார்க்கிறார்) மான் கணக்காத்தான் இருக்கு. உம்... சரி. ஓடிப் போய்ட வேண்டியதுதான். ரெண்டு பேரும் ஒரு நா தீர்மானிச்சு வீட்டை விட்டு ஓடிப் போயிடுங்க. எங்கயும் போக வேண்டாம். கிராமத்திலே எங்க வீட்டுக்கு வந்துருங்கோ. நான் உங்களை மீட்டுக் கொண்டு வராப்லப் பண்ணி, ''நான் தற்செயலாப் பார்த்துக் கூட்டிண்டு வந்தேன். ரெண்டும் ஊமத்தங்காயைத் தின்றதுக்கு இருந்தது. என்னடாது. ஜாதியாவது. ஒண்றாவது. பேசாமக் கல்யாணத்தை முடிச்சுட்டுப் போவீங்களான்னு அழைச்சிண்டு வந்தேன்'' அப்படீன்னு சமாதானம் பண்ணி வெக்கறேன்.

இளைஞன் (கீழே விழுந்து நமஸ்கரித்து): ஐயா, நீங்கள்ளாந்தான் தெய்வம்.

மாமா: அதெல்லாம் ஒரு எழவும் இல்லை. நான் வேண்டாம்னு சொன்னாலும் ஓடித்தான் போகப் போறீங்க.

அம்மா (உள்ளே வந்து): செல்வராஜ், ரொம்ப தாங்க்ஸ். கொஞ்சம் கிருஷ்ணாயில் கிடைக்குமா?

இளைஞன்: கிருஷ்ணாயில் கடையையே வாங்கிட்டு வர்றேம்மா. ஒங்களுக்கு இல்லாமயா?

அம்மா (அவன் செல்ல முயல): எத்தனை நல்ல பையன் பாரு. நம்ம குடும்பத்துப் பிள்ளை கூட இல்லை. எதுக்காகவோ இத்தனை ஒத்தாசை பண்றது. பெரியவாளை நமஸ்காரம் பண்றது.

மாமா: எல்லாம் பின்னால புரியும். நீ போய்ட்டு வாப்பா. அடுத்த தடவை ரெண்டு சட்டையா போட்டுண்டு வா.

அம்மா (அவன் சென்ற பின்): சாப்பிட வரேளாண்ணா?

மாமா: சாப்டாப் போச்சு. மத்தியானம் ஜோலி இருக்கு. பாத்துட்டு அதோடவே சாயங்கால பஸ்லே போயிடறேன்.

அம்மா: என்னண்ணா இது! இப்பத்தான் வந்தாப்ல இருக்கு. அதுக்குள்ள போறேங்கறேளே!

மாமா: கவலைப்படாதே. சீக்கிரமே கல்யாணச் செய்தியோட வரேன்... (ஜானகி வியப்புடன் பார்க்க) உம் பொண்ணுக்கு நல்ல வரனைப் பாத்து, கல்யாணச் சேதியோட வரேங்கறேன்.

அம்மா: ஆமாண்ணா. அதுக்கும் பதினெட்டு ரொம்பிப் போச்சு.

மாமா: தெரியும். சொன்னான். பீட்லே வச்சிருக்கியா? வாசனை அள்ளறதே ஆளை!

(அவர் சாப்பிடச்செல்ல ஒளி கொஞ்சம் மங்குகிறது.)

● ● ●

பவானி (குரல்): நாம் இதுவரை பார்த்தது மாமாவின் விஜயத்துக்கு ஒரு சாம்பிள் தான்... சாயங்காலம் போகப் போகிறார் என்றதும் எங்களுக்கு வயிற்றில் ஒரு மாதிரி பண்ணி வருத்தச் சுமை ஏற்பட்டது. எங்களை ஈ பிடிக்க வைத்து, என் காதல் தேவதையாக அவதாரம் செய்து, எங்கள் அப்பாவின் அலாரம் கடிகாரத்தை உண்டு இல்லை என்று ரிப்பேர் செய்து, சயத்தைத் தங்கமாக்கும் வித்

---

# 'பொன்மொழிகள்' போட்டி முடிவு

சரியான விடை :

(1) குழந்தைசாமி
(2) ம.பொ.சி.
(3) பி. ராமமூர்த்தி
(4) இளையராஜா
(5) நா. பார்த்தசாரதி

சரியான விடைகளை எழுதி ரூ. 300 பரிசினைச் சமமாகப் பகிர்ந்துகொள்பவர்கள்:

(1) கே. எஸ். நாகராஜன்
8, குற்றாலயம்,
கொன்னூர் நெடுஞ்சாலை,
அயனாவரம், சென்னை-600023

(2) எஸ். சாந்தி,
9/2, முத்துசாமி தெரு,
திருப்பூர்.

(3) ராம. அண்ணாமலை,
111-D, அண்ணா சாலை,
பாண்டிச்சேரி-605 001.

# தலைவலி பலவகை உண்டு





# சிகிச்சை ஒன்றே ஒன்று!

# அனாஸின்

## இதில் அதிக அளவில் வலி-நிவாரணி அடங்கியுள்ளது

துரித நிவாரணம் அளிக்க, உலகெங்கும் டாக்டர்கள் மிக
அதிகமாக சிபாரிசு செய்யும், வலி-நிவாரணி மருந்து
அதிக அளவில் கொண்டது—அனாஸின்.

தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ, முதுகு வலி,
தசை வலி, பல் வலி ஆகியவற்றிற்கு
நல்ல பலனளிக்கிறது.

அனாஸின் மீது மட்டுமே
நம்பிக்கை வையுங்கள்.

இப்போது பாதுகாப்பான ஃபாயில் உறையில்.






இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி மருந்து

# தேவேந்திரா சாரீஸ்

(மிகமிக உயர்ந்த பட்டும் நூலும் கலந்து தயாரிக்கப்பட்டது)

**27, ஏலா சுந்தப்பன் தெரு,** *(முதல் மாடியில்)*

*(வால்டாக்ஸ் ரோடு, ஃப்ளூ ஸ்டார் இண்டர்நேஷனல் ஹோட்டல் அருகில்)*

**சென்னை-600 003** போன்: 33113

கிடைக்கும் இடங்கள்:

**"கிருஹ லக்ஷ்மி" மாதர்கள் கூட்டுறவு அமைப்பு,** B-39, சௌத் மோதி பாக், நானக்புரா, புது டெல்லி-110 021 ❋ திருமதி **உமா சுப்பிரமணியம்,** D-106, ஈஸ்ட் ஆப் கைலாஷ் நியூ டெல்லி-65 போன்: 647276 ❋ **M/s காமாட்சி சில்க் ஹவுஸ்,** 5/38, W.E.A. அஜ்மல்கான் ரோடு, கரோல்பாக், புதுடெல்லி-110 005 ❋ **பங்கஜம் சுந்தரராஜன்,** C 6/A, D.D.A. Flats, முனிர்கா, புது டெல்லி-67 ❋ **Mrs. சாரதா** 16/449, வீரம் பில்டிங், மாதுங்கா, பம்பாய்-19 ❋ **சுசீலாமணி,** 22, காந்தி மஹால், தேஜோ கோயா பார்க், வின்செண்ட் ரோடு, மாதுங்கா, பம்பாய்-19 ❋ **லக்ஷ்மி நாராயணன்,** 5, வாணி கோவாப்பரேடிவ் ஹவுசிங் சொஸைட்டி, வல்லபாக் ரோடு, காட் கோபர் (கிழக்கு) பம்பாய்-77 ❋ **நல்லீஸ் சில்க் சாரீஸ் சென்டர்,** 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்-19 ❋ **சௌத் இந்தியன் கன்ஸர்ன்,** 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்-19 ❋ **லதா கிருஷ்ணன்,** பிளாட் நெ. 20, காமதேனு கோ—ஆப், பெஸ்டம் சாகர், செம்பூர், பம்பாய்-89 (கிளாஸ் பாக்டரி அருகில்) ❋ **ஜெயஸ்ரீ** 2-A, தேசப் பிரியா பார்க் ரோடு, கல்கத்தா-26 **S. பொன்னப்பன்,** 8–2–61, 2-வது பஜார், செகந்திராபாத் ❋ திருமதி **T. S. சகுந்தலா சீனிவாசன்,** 18/1-A, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா & பலப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர், போன்: 224357 ❋ திருமதி **துர்காம்பாள்,** 5-A, ராமச்சந்திரபுரம், தென்னூர், திருச்சி ❋ திரு **S. சேதுராமன்,** 9, பாணு துரை சன்னதி தெரு, கும்பகோணம்-612 001 போன் 972 ❋ **ராணி சில்க்,** 13, மஹால் 4வது தெரு, மதுரை-1 போன்: 26295 ❋ **S. லெட்சுமி** 24, சீனிவாசா தெரு, சேலம்-1 (ரயில்வே ஸ்டேஷன் அருகில்) ❋ **ஸ்ரீ காமேஸ்வரி ஏஜென்சீஸ்,** 6/175, திருச்சி ரோடு, (ஆல் இந்தியா ரேடியோ அருகில்) ராமநாதபுரம், கோயம்புத்தூர்-641 018 ❋ **மகாலெட்சுமி சில்க் சென்டர்,** தீன் பில்டிங், உள்புறம், 175/11, மேல வீதி, சிதம்பரம் ❋ **ஹேமாவதி ஏஜென்சீஸ்,** 2711, நாயக்கார செட்டி தெரு, தஞ்சாவூர் ❋ **பாரதி மூர்த்தி,** 100, ஸ்ரீவராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி ❋ **M/s. சீதாராம் வேர் ஹவுஸ் சில்க் எம்போரியம்,** M. O. ரோடு, திருச்சூர்-680 002 ❋ **S. சுந்தரம்,** 9, சாத்தான் கோவில் தெரு, வடிவீச்வரம், நாகர்கோயில்-2 ❋ திருமதி **K. சீதாலட்சுமி,** 41, 4வது டிரஸ்ட் கிராஸ் தெரு, மந்தவெளிப்பாக்கம், சென்னை-28 போன்: 73244 ❋ திருமதி **சாவித்திரி பாலசுப்ரமணியம்,** 2, 7-வது தெரு, நங்கநல்லூர், சென்னை-61 (பிள்ளையார் கோவில் அருகில்), போன்: 433737

---

குறிப்பு: சென்னை நகரில் எந்த கடைகளுக்கும் எங்கள் புடவைகள் சப்ளை கிடையாது. மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.

தைக்காக மனித எலும்பு தேட வைத்து. விநோதமான விஜயம்தான். சாயங்காலம் அப்பா ஆபீஸிலிருந்து வந்ததும் அவர் கேட்ட முதல் கேள்வி....

● ● ●

அப்பா (ஆபீஸிலிருந்து திரும்பி வந்தவர், பயத்துடன்): ஜானகி, ஜானகி! ஒங் கண்ணு போயாச்சா?

அம்மா (உள்ளே இருந்து வந்து): அவர் எப்பப் போகப் போறூர்ங்கிறதிலேயே இருங்கோ. அஞ்சரை மணி பஸ்ஸைப் புடிக்கப் போறதாச் சொல்லியிருக்கார். வெளில போயிருக்கார். வந்துருவார். அவர் போறவரைக்கும் கொஞ்சம் கமுகமா இருங்கோ.

அப்பா (அலமாரியிலிருந்து நீளமாக ஒரு மெயின் ஸ்பிரிங்கை எடுத்து): கடிகாரம் ரிப்பேர் பண்ணியிருக்கிற அழகைப் பாரு.

நாணு: மாமா வந்தப்புறம் சரி பண்ணிட்டுத் தான் போப்போறன்னு சொன்னூர்.

அப்பா: இது என்ன இது, கருமம்! அய் யய்யோ!

(அனாடமி பாடத்துக்கு என்று குறிக் கப்பட்ட மனித எலும்பு ஒன்றை எடுக்கிறூர். மாமா வருகிறூர், தலையில் முண்டாசுடன்.)

அப்பா: வாரும். என்ன தலையில முண் டாசு?

மாமா: வரப்போ எம். ஜி. ஆர். ஊர் கோலமாப் போயிண்டிருந்தார். என்னைப் பார்த்தார்னு ரொம்ப ஆபத்து. எங்க யாவது அடையாளம் கண்டு பிடிச்சு ஆத்துக்கு அழைச்சுண்டு போயிட்டா, பஸ் போயிடும் பாரு... ஆமாம், என்ன ஓய், கையில எலும்பை வச்சிண்டு திரி தண்டி சந்நியாசி மாதிரி நிக்கறீர்?

அப்பா: இதெல்லாம் உம்ம வேலையாத்தான் இருக்கணும்.

மாமா: எங்க, பார்க்கலாம். ஓ, கொண்டு வந்துட்டானு நம்ம நாணு? கெட்டிக் காரன். ஒண்ணுமில்லே, ஈயத்தைத் தங் கமா ஆக்கற வித்தை தெரியும் எனக்கு. அதுக்கு மனுஷ எலும்பு வேணும்(ன்ன். எங்கேயோ மெடிகல் காலேஜ் ஸ்டூடண்ட் கிட்ட வாங்கிண்டு வந்துட்டான் போலி ருக்கு. பார்க்கலாம், சமயம் இருந்தா தங்கம் காய்ச்சிப் பார்க்கலாம்.

அப்பா: ஓய், இருபதாம் நூற்றூண்டில உம்ம புருடாவையும் நம்பிண்டு ஜனங்கள் இருக்கு பாரும்.

மாமா: அப்ப நான் சொல்றது புருடாங்க றேளா. ஜானகி, ஈயச்சொம்பு ஒண்ணு கொண்டு வா. கூடவே ஸ்டவ்வைப் பத்த வச்சுக் கொண்டுவா.

அப்பா: (பீதியுடன்) வேண்டாம். அடுத்த விஜயத்தும்போது வச்சுக்கலாம். உங்க ளுக்குப் பஸ்ஸுக்கு நாழியாயிடும். (மெயின் ஸ்பிரிங்கைக் காட்டி) இதுக்கு என்ன சொல்றீர்? இதை எப்ப உள்ள போடறதா உத்தேசம்?

மாமா: ஓ, கெடிகாரமா? ரிப்பேர் பண்ணி யாச்சே?ஒடுமேஅது...(பார்த்தே)ஓடறது.

அப்பா: ஸ்பிரிங் இல்லாதயா?



முதல் பிச்சைக்காரன்: "எதுக்கு ட்யூஷன் மாஸ்டரை வெச்சு இங்கிலீஷ் கத்துக்கிறே?"

இரண்டாவது பிச்சைக்காரன்: அடுத்த மாசம் பிச்சை எடுக்க அமெரிக்கா போகப் போறேனே!"

- கீழை அ. கதிர்வேல்

மாமா: ஆமாம்... ஓடற வரைச்கும் ஓடட் டும். ஒருவேளை நின்னுடுத்துன்னு ஸ்பிரிங் எப்படி உள்ளே போடறதுன்னு நாணு வுக்குச் சொல்லித் தந்திருக்கேன். நீரும், கத்துக்கோம். எல்லாத்தையும் நானே செய்யணுமா? ஆபீஸ்லேருந்து வந்தது மொதல் சும்மாதானே உக்காண்டிருக் கேள்! கழட்டிப் போடறது!

அப்பா: நாணு? உம்ம பனியனைப் போட் டுண்ட ரூச்சுத் திணறலே இன்னும் போகலே.

(தங்கசாமி உள்ளே வருகிறுன்.

மாமா: தங்கசாமி, கொஞ்சம் இரு. காபி சாப்பிட்டுட்டு வரேன். பஸ் ஸ்டாண்டு வரைக்கும் என் பொட்டியைத் தூக் கிண்டு வரயா?

தங்கசாமி: சரிங்க.

அப்பா: ஓய், டயமாயிடுத்து. மணி அஞ்சே கால்.

மாமா: ஒரு வேலை பண்ணு தங்கசாமி. இந்தப் பொட்டியை எடுத்துண்டு முன் னுலே போய் பஸ் ஸ்டாண்டிலே இரு. நான் காப்பி சாப்டுட்டு வந்துடறேன். என்ன?

தங்கசாமி: சரிங்க.

(எடுத்துக் கொண்டு போகிறுன். அம்மா காபி கொண்டு வர, அதைப் பருகு கிறூர் மாமா. எல்லோரும் கூடு கிறூர்கள். அப்பா இப்போது கொஞ்சம் சந்தோஷத்துடன் இருக்கிறூர்.)

அப்பா: அப்ப ஊிளம்பறுப்ல இருக்கு.

மாமா: சீக்கிரமே உங்களுக்கு நல்ல சேதி யோட வருவேன்... என்ன பவானி?

பவானி: போங்க மாமா.

(கண் புதைக்கிறுன்.)

(தொடரும்)

# "நான் விற்பனை செய்யும் டிவி நான் விற்காமலேயே விற்பனையாகும் ஒரே டிவி!"



"ஏனென்றால், இது யாருடைய முயற்சியுமில்லாமல் தானாகவே விற்பனையாகும் ஒரே டிவி" என்கிறார் அபிராமபுரத்தில் உள்ள 'டிவிஹோம்' உரிமையாளர் திரு. சேஷாத்ரி.

மேலும், "நான் டிவி வியாபாரம் ஆரம்பிப்பதற்கு முன்னால், பல டிவிகளுக்கு ஆதரவாகவும் எதிராகவும் உள்ள பண்புகளை அலசி ஆராய்ந்த பின்னரே பலவித பிராண்டு டிவிகளில் ஒன்றை மட்டும் வியாபாரம் செய்யலாமென முடிவுக்கு வந்தேன்.

ஒரே ஒரு ரக டிவியை மட்டும் விற்க முடிவு செய்ததால் அது எலக்ட்ரானிக்ஸ் துறையிலே மிகவும் நம்பகமானதாகவும் எல்லோரும் விரும்பும் டிவியாகவும் இருக்க வேண்டுமென நினைத்தேன். ஆதலால் நான் விற்பதற்கு தேர்ந்தெடுத்த டிவி சாலிடெர். இன்று சாலிடெர் டிவியை விற்பனை செய்ய நான் சிரமப்பட வேண்டியதில்லை. ஏனென்றால் இது தானாகவே விற்பனையாகிறது"

அனுபவம் பேசுகிறது, ஆதாரபூர்வமாக! இவையெல்லாம் சாலிடெரின் சிறந்த செயல் திறனுக்கான அத்தாட்சி. அடிக்கடி தொல்லைத் தராத ஒரே டிவி சாலிடெர் என்பது உறுதியான உண்மை.

மேலும் சாலிடெரின் பழுதுபார்க்கும் சர்வீஸ் என்ஜினியர்கள் எப்பொழுதும், எங்கிலும் உங்களுக்காகவே சேவை செய்யக் காத்திருக்கின்றனர். அதற்கும் மேலாக சாலிடெரின் ஆராய்ச்சி மற்றும் மேம்பாட்டுத் துறையினர் (R & D) நீங்கள் எதிர்பார்க்கும் வகையில், சிறந்ததை மேலும் சிறப்புற்றதாக்கும் பணியில் ஈடுபட்டுள்ளனர். எப்பொழுதும் உங்களுக்காகவே!

இத்தகைய பாரம்பரியத்தில் உருவானதே புதிய TS62E—சாலிடெரின் திறனுக்கும் தரத்திற்கும் மற்றுமோர் எடுத்துக்காட்டு.

- 14 வாட் சக்தி வாய்ந்த ஆம்ப்ளிஃபையர்.
- 20 செ.மீ. ஃபெரக்ஸ்டியூர் டியூயல் கோன்ஸ்பீக்கர்.
- ரெக்கார்ட் பிளேயர், டேப் ரெக்கார்டர் போன்ற வற்றை இணைக்க 'பிக்அப்' அமைப்பு.
- தேவையில்லா ஒலியை நீக்க ஆட்டோமேடிக் சாதனம்.
- விஷன் இன்டர்மீடியட் ஃபிரீக்குவன்ஸியில் (V.I.F) கண்டுள்ள முன்னேற்றத் தினால் ஈடு இணையற்ற படத் தோற்றம்.
- இரண்டு ஷட்டர்கள் கொண்ட லாமினேடட் காபினெட்.
- மழைக் காலங்களில் உங்கள் டிவியைப் பாது காக்க கையாளப்பட்டுள்ள நவீன முறை.

மேலும் விவரமறிய இன்றே உங்களருகாமையிலுள்ள சாலிடெர் டீலரை அணுகுங்கள்.

ரூ. 325 மிச்சம்
உள்ளடங்கிய வோல்டேஜ் ஸ்டெபிலைஸர்



# சாலிடெர்

-தொல்லையில்லாத் தொலைக்காட்சி

HE 764B

# வேதம் பாடிய ஜோதி

— ஆனந்தி

கவியரசர்களும் புலவர்களும், பக்தர்களும் எத்தனை தடவை சூரியமூர்த்தியை உதாரணத்துக்கும் சாட்சிக்கும் அழைக்கின்றனர் என்று எண்ணிப் பார்த்தால் வியப்பாக இருக்கிறது.

ஸ்ரீ ராமபிரானை ''இனமணி வம்ச திலக லாவண்யா'' என்று பாடிப் புகழ்கிறார் ஸ்ரீ தியாகராஜ சுவாமி.

''ஆதித்ய ஹ்ருதயம்'' என்னும் மந்திரத்தை அகஸ்திய முனிவர் உபதேசித்தபிறகே ஸ்ரீ ராமபிரானுக்கு ராவணனை வெற்றி கொள்ள முடிந்தது என்று ராமாயணத்தில் படிக்கிறோம்.

மும்மூர்த்திகளின் ஸ்தூல வடிவமாகவே கருத இடமிருக்கிறது.

நமது நாட்டு முனிவர்கள் சூரிய வழிபாட்டை நித்திய கர்மாக்களில் ஒன்றாக வைத்ததில் ஆச்சரியமே இல்லை. ஆனாலும் ஆதித்தனுக்கு ஆலயங்கள் அபூர்வமாகவே காணப்படுகின்றன.

வடநாட்டில் கொனாரக் என்ற கோவில் பிரசித்தமானது. தென்னகத்தில் சோழ மண்டலத்தில் மாயூரத்திலிருந்து சுமார் பத்து கிலோமீட்டர் தொலைவில் சூரியனார்கோவில் இருக்கிறது.

சாலையில் சூரியனார்கோவில் என்ற பெயர்ப் பலகை காணப்படுகிறது. பல ஆண்டுகளாக



○ சூரியன் - தேவியருடன்



○ சூரியனார் கோவில் கோபுரம்

வசிஷ்டர் வாயால் 'பிரும்மரிஷி' என்று புகழப்பட்டவரும், ஒரு புதிய நக்ஷத்திர மண்டலத்தையே தமது தவ வலிமையால் படைத்தவருமான விசுவாமித்திரர் சூரிய பகவானிடம் கொண்ட பக்தியானது முதிர்ந்து 'காயத்ரி மந்திர'மாகக் கனிந்தது. அந்த மந்திரமானது எத்தனையோ நூற்றாண்டுகளாக மன வலிமையையும் புத்தியையும் வளர்க்கப் பாடுபட்ட அந்தணர்களுக்கு ஒரு மாபெரும் சக்தியாகவும், கவசமுமாகவே இருந்து காத்து வந்திருக்கிறது.

உலகம் முழுவதும் சூரிய வழிபாடு காணப்படுகிறது என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள்.

உயிர்களின் தோற்றத்துக்கே காரணமாக இருப்பவரும், அசைகின்ற, அசைவற்ற ஜீவன்களுக்கு உணவை உண்டாக்கித் தருபவரும், புறவொளி, உள்ளொளி இரண்டையும் கொடுப்பவருமான சூரிய மூர்த்தியைத் தொழுவதில் ஜாதி மத பேதங்கள் எவ்வாறு எழக்கூடும்? ஆக்கல், சாத்தல், அழித்தல் என்ற முத்தொழிலையும் செய்யும் ஆதித்தனை

எதிர்பார்த்திருந்த தரிசனம் கிடைக்கப் போகிறது. சிறிய கோபுரம்தான். நல்ல வேளையாக இரண்டொரு கடைகள் காணப்படுகின்றன. அர்ச்சனைத் தட்டு வாங்கிக் கொண்டு கோபுரத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டே தரிசனத்துக்குச் செல்கிறோம்.

இந்தக் கோவிலைப் பற்றிய வரலாற்றைக் கும்பகோணம் ஸ்ரீ என். சேதுராமன் அவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொண்டபடியால் நெஞ்சத்தில் ஒரு பெருமிதம். ஏதோ இந்தக் கோவிலைக் கட்டியதில் நமக்குக் கூடப் பங்கிருப்பது போல ஒரு பரவசம்.

இந்த ஊருக்குக் குலோத்துங்க சோழ மார்த்தாண்ட சதுர்வேதி மங்கலம் என்ற பெயர் கல்வெட்டுக்களில் காணப்படுகிறதாம். கி. பி. 1114ல் குலோத்துங்க சோழ மன்னரால் சூரிய மண்டலத்தை மையமாக வைத்துக் கட்டி முடிக்கப்பட்டது. வான சாத்திரத்தை அடிப்படையாகக் கொண்ட கோவில்.

சோழ நாட்டின் வரலாற்றில் மிகவும் புகழ் பெற்ற மன்னர் ராஜேந்திர சோழ

சக்கரவர்த்தி. அவருடைய பெண் வயிற்றுப் பேரன் குலோத்துங்க சோழ மன்னன். வட நாட்டில் காசி, கன்னோசி இரண்டையும் ஆண்டு வந்த கோவிந்த சந்திரன், குலோத்துங்கனின் அன்புக்குரிய நண்பன். அவன் சௌர வழிபாடு செய்து வந்தபடியால் அவனைப் பின்பற்றிக் குலோத்துங்க மன்னனும் தமிழ் நாட்டில் சூரியனுக்கு ஆலயம் எழுப்பினான். 'ஆதித்ய ஹிருதய' அடிப்படையில் எழுந்தது இக் கோவில் என்று கூறுகிறார்கள்.

கோள்களின் வழிபாடு தமிழகத்தில் எப்போது ஏற்பட்டது என்று திட்டவட்டமாகக் கூற முடியவில்லை. எட்டாவது நூற்றாண்டுக்கு முன்பு இருந்ததாகச் சான்றுகள் கிடைக்கவில்லை. அநேகமாகப் பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப் பிறகே ஏற்பட்டிருக்க வேண்டுமென்பது ஆராய்ச்சியாளர் கருத்து.

சூரியனார் கோவில் பிராகாரத்தில் நடக்கும்போது சுரீலென்று சுடுகின்றது. சுடாதா பின்னே? விநாயகரைத் தரிசித்துக் கன்னத்தில் போட்டுக் கொண்டு விட்டு ஓடிச் சென்று படியேறுகிறோம். அப்பாடா! நிழலருமை வெயிலிலே என்று தெரியாமலா சொன்னார்கள்!

சூரிய பகவான் சந்நிதிக்குச் செல்லும் முன் ஸ்ரீ விசுவநாதர், விசாலாட்சியன்னையைத் தரிசிக்கிறோம். கருவறையில் வட்டமான பிரபையுடன் சிவ சூரிய நாராயண தேவரும், உஷா — பிரத்யுஷா தேவியரும் காட்சி தருகிறார்கள். தீபங்கள் சுடர் விடுகின்றன. அர்ச்சகர் கற்பூர தீபாராதனை காட்டுகிறார்! பரஞ்சோதிக்குக் கற்பூர ஜோதி!

ஆதவனின் சந்நிதியில் நின்று தலபுராணக் கதையைக் கேட்கலாம். விந்திய மலைச் சாரலில் தவம் செய்து வந்த காலவ மகரிஷி ஜோதிட சாத்திரத்தில் வல்லவர். தம்முடைய ஜாதகத்தில் கிரக தோஷம் இருப்பதால் அது தம்முடைய சந்ததியினரையும் பாதிக்குமே என்று கவலையடைந்தார். நவக்கிரகங்களை நோக்கித் தவம் செய்தார். ஒன்பது கோள்களும் அவருக்கு முன்னே வந்து காட்சியளித்தார்கள்.

''எனக்கும் என் சந்ததியினருக்கும் கிரக தோஷங்களினால் தீமை வராமல் காக்க வேண்டும்'' என்று வரம் கேட்டார். நவக்கிரகங்களும் மனம் பூரித்து அவர் கோரியதை வழங்கி விட்டார்கள்.

கோள்களின் அதிதேவதைகளான ஈசுவரன், உமையம்மையார், குமரக்கடவுள் முதலியவர்களுக்கு இவர்கள் வரம் கொடுத்தது பிடிக்கவில்லை. ''அவரவர் பாப புண்ணியங்களுக்கு ஏற்றபடிதான் உலக வாழ்க்கை அமையும். அதை மாற்றி வரம் கொடுத்தது தவறு. உங்களுக்கு வரம் கொடுக்கும் உரிமையும் கிடையாது'' என்று கூறி சாபம் கொடுத்து விட்டார்கள்.

சபிக்கப்பட்ட கிரகங்கள் சாப விமோசனம் கேட்கவே சோழ நாட்டில் அர்க்கவனம் என்னும் இடத்திற்குச் சென்று அங்குள்ள தீர்த்தங்களில் நீராடி விரதமிருந்தால் சாப விமோசனம் கிடைக்கும் என அருளினார்கள்.

தல விருட்சம் வெள்ளெருக்கு. கோள்கள் ஞாயிற்றுக் கிழமை தோறும் விரதமிருந்து வெள்ளெருக்கின் இலையில் தயிர் சாதம் சாப்பிட்டதாகக் கதை. இப்படி நவக்கிரகங்களும் தவம் செய்த இடம் சூரியனார் கோவில்.

கதிரவனின் சந்நிதியிலிருந்து திரும்பும் போது கொஞ்சம் கவனம் தேவை. எதிரே தேவ குருவான வியாழ பகவான் சூரிய


○ அஸ்திர தேவர்


○ சப்தாஸ்வம்

மூர்த்தியின் சந்நிதியை நோக்கியவாறு அவருடைய உக்கிரத்தைத் தணித்துக் கொண்டு நிற்கிறார். குருவை எதிர்த்துச் செல்லக் கூடாதாகையால் அவரை வணங்கித் தியானம் செய்துவிட்டு நமக்கு இடப்புறமுள்ள வாயில் வழியாக இறங்க வேண்டும். சூரியனுடைய வாகனமான சப்தாச்வம் என்ற பரியும் சந்நிதிக்கு எதிரே இருக்கிறது. கோவில் விமானத்தில் ஏழு பரிகள் இழுப்பது போன்ற அமைப்பு இருக்கிறது.

பிராகாரத்தை அப்பிரதட்சிணமாகவே சுற்றி சனீச்வர பகவான் முதல் ராகு வரை தரிசனம் செய்துவிட்டுத் திரும்பிவிட வேண்டும். பிரதட்சிணம் செய்யும் வழக்கம் இங்கு இல்லை.

இங்குள்ள உற்சவ விக்கிரகங்கள் மிக அழகானவை. சூரியமூர்த்தி தம் இரு கரங்களிலும் தாமரையை ஏந்தி வட்ட வடிவமான பிரபையுடன் அழகுச் சுடராக நிற்கிறார். வெம்மையைப் பொழியும் ஆதித்தனின் கரங்களில் தண்மையே உருவான பங்கய மலர்களா? 'என்னை வழிபடுவோர் உள்ளங்களைக் குளிரச் செய்வேன்' என்று காட்டுகிறாரோ?

இந்தக் கோவிலில் உள்ள அஸ்திர தேவர் பிம்பத்திலும் சூரிய பகவானே காணப்படுகிறார். மும்முனைகளுடன் கூடிய அஸ்திர தேவருக்கு ஆலய வழிபாட்டில் ஒரு சிறந்த இடம் உண்டு. விழாக் காலங்களில் நடத்தும் பொறுப்பேற்கும் குருக்கள் கங்கணம் கட்டிக் கொள்ளும்போது அஸ்திர தேவருக்கும் அந்தக் காப்புக் கட்டுவார்கள். விதி உலா வைபவங்கள் முடிந்து தீர்த்தவாரி நடக்கும் போது ரக்ஷாபந்தனம் செய்து கொண்டவர் அஸ்திர தேவரைக் கையில் தாங்கிக் கொண்டு திருக்குளத்தில் மூழ்குவார். கூடியிருக்கும் பக்தர்கள் அதே சமயத்தில் நீரில் மூழ்கி அந்தப் புனிதநீரின் மூலம் ஈசன் அருளைப் பெறுவதாக ஐதிகம். சிவாலயங்களில் சிவபெருமானுடைய வடிவம் தாங்கிய அஸ்திர தேவரைக் காணலாம். அபூர்வமாக அம்பிகையுடன் காணப்படுவதும் உண்டு. விஷ்ணு ஆலயங்களில் சக்கர ரூபமாக விளங்குகிறார் அஸ்திர தேவர்.

ஒன்பது கோள்களுக்கும் தனித் தனிச் சந்நிதிகளுடன் விளங்கும் அரிய கோவில் சூரியனார் கோவில்.

வேதம் பாடிய சோதியைக் கண்டு
வேள்விப் பாடல்கள் பாடுதற் குற்றேன்
நாதவார் கடலின்னொலியோடு
நாற்றமிழ்ச் சொல் இசையையும்
சேர்ப்பேன்
காத மாயிரம் ஓர் கணத்துள்ளே
கடுகியோடும் கதிரினம் பாடி
ஆதவா நினைவாழ்த்திட வந்தேன்
அணிகொள் வாண் முகம் காட்டுதிசற்றே!
—பாரதியார்

ஆம்! உன்னை வாழ்த்திடவே வந்தோம். ஆதித்தனே! நீ வாழ்க! உன் அருள் பெருகுவதாக! உயிர் காப்பவனான தினகரனே, உனக்கு மங்களம். மனித குலம் மேன்மையுற, சூரியனே! நீ வாழ்வாயாக!

புகைப்படங்கள்: என். ராமகிருஷ்ணா

## அருள்வாக்கு

நாம் நம் புத்தி பலத்தையும், தேக பலத்தையும் வைத்துக் கொண்டு ஒரு வீட்டைக் கட்டுகிறோம். குருவி தன் புத்தி பலத்தையும் தேக பலத்தையும் வைத்துக் கொண்டு கூட்டைக் கட்டுகிறது. இந்த உலகத்தையெல்லாம் நிர்மாணிக்கிற புத்தியும் சக்தியும் கொண்ட ஒன்று இருக்கிறதல்லவா? அதுதான் ஸ்வாமி.

ஒன்றிலிருந்து ஒன்றாக சக்தி அதிகமாகிக் கொண்டே போகிற இயற்கையிலிருந்து இப்படி ஈசுவர தத்துவத்துக்குப் போகிறோம்.

ஒன்றுக்கு ஒன்று மாறாக இருக்கிற எதிரெதிர்ச் சக்தி ஜோடிகளையும் நாம் இயற்கையில் பார்க்கிறோம். கடும் பனிக் காலம் என்று ஒன்று இருந்தால் கடும் வெய்யில் காலம் என்று இருக்கிறது. இரவு ஒன்று என்று இருந்தால் பகல் என்பதாக ஒன்று இருக்கிறது. மிருதுவான புஷ்பங்கள் இருப்பது போல் கூரான முட்கள் இருக்கின்றன. தித்திப்புக்கு மாறாகக் கசப்பு இருக்கிறது. அன்புக்கு எதிராகத் துவேஷம் இருக்கிறது. எதற்கும் எதிர்வெட்டாக ஒரு மாற்று இயற்கையில் இருக்கிறது. இந்த ரீதியில் ஆலோசனை செய்தால் மனித மனசுக்கு மாற்றாகவும் ஒன்று இருக்கத்தானே வேண்டும்? மனித மனசின் சுபாவம் என்ன? ஆசாபாசங்களில் முழுகிச் சஞ்சலித்துக் கொண்டே இருப்பது, திருப்தியே இல்லாமல் தவிப்பது. இதற்கு மாறாக ஆசாபாசமின்றி, சஞ்சலமே இன்றி, சாசுவத சாந்தமாகவும் சௌக்கியமாகவும் திருப்தியாகவும் இருக்கிற வஸ்துவும் இருக்கத்தான் வேண்டும். அப்படிப்பட்ட வஸ்துதான் ஸ்வாமி.

—ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்.



ஆபீஸ் விஷயமாய் முந்தின ராத்திரியே ராஜபாளையம் வந்து, லாட்ஜில் ரூம் எடுத்து தங்கி, மறுநாள் காலை எழுந்து குளித்து டிரஸ் பண்ணிக் கொண்டு, நானும் சிவராமனும் வெளியே புறப்பட வாசலுக்கு வந்தபோது, கௌண்டரில் உட்கார்ந்திருந்த லாட்ஜ் மானேஜர் அவசர அவசரமாய்க் கூப்பிட்டார்.

''ஸார்...உங்கள்ல யார் கார்த்திகேயன்?''

''நான்தான்...'' அவரை ஏறிட்டேன்.

''உங்களுக்குக் கோயமுத்தூர்ல யிருந்து டிரங்க் கால் வந்திருக்கு... கார்த்திகா அண்ட் கம்பெனியிலிருந்து பேசறாங்க... அது உங்க ஆபீஸ்தானே...?''

''ஆமாம்.''

''அப்பப் பேசுங்க!'' — மானேஜர் ரிஸீவரை என்னிடம் நீட்ட நான் ஆச்சர்யமாய் வாங்கிக் கொண்டேன்.

மறு முனையில் ஆபீஸ் மானேஜர் வைகுண்டராமன் பதற்றமாய்க் கேட்டார்..., ''பேசறது யாரு? கார்த்திகேயனா?''

# வழித்துணைகள் சுமைதாங்கிகள் அல்ல...

ராஜேஷ்குமார்



''எஸ் ஸார்...''

''சிவராமன் உங்க பக்கத்திலேயா இருக்கிறார்?''

''ஆமாம் ஸார்...''

''இதோ பாருங்க கார்த்திகேயன்! இப்போ நான் சொல்லப் போற விஷயத்தைத் தப்பித் தவறிக்கூட சிவராமன் கிட்டச் சொல்லிடாதீங்க....''

நான் திடுக்கிட்டேன். ''ஏன் ஸார்... என்ன விஷயம்?''

மறு முனையில் வைகுண்டராமன் குரலைக் கொஞ்சம் தாழ்த்திக் கொண்டார். ''சிவராமனோட மனைவி இன்னிக்குக் காலைல ஏழு மணிக்குத் திடீர்னு இறந்துட்டாங்க... ஹார்ட் அட்டாக்குன்னு டாக்டர்ஸ் சொல்றாங்க....''

நான் அதிர்ந்துபோய்ப் பக்கத்தில் நின்றிருந்த சிவராமனைப் பார்த்தேன். பக்கத்து மேஜை மேலிருந்த நாளிதழ் ஒன்றைப் புரட்டிக் கொண்டிருந்தவன், ''என்னடா விஷயம்? ஆபீஸ்ல யார் பேசறாங்க?'' என்று கேட்டுக் கொண்டே என் அருகே வந்தான். நான் கஷ்டப்பட்டுப் புன்னகை செய்து முகத்திற்குச் சந்தோஷத்தைக் கொடுத்தேன். 'ஒன்றுமில்லை' என்பது போல் சைகை செய்தேன்.

மறுமுனையில் வைகுண்டராமன் கரகரக்க ஆரம்பித்தார். ''சிவராமன் கிட்ட விஷயத்தை மறைச்சு — சேல்ஸ் டாக்ஸ் பிராப்ளம்னு சொல்லுங்க. இல்லேன்னா அவரை வழி நெடுகச் சமாதானப்படுத்தி, சமாளிச்சு அழைச்சு வரது ரொம்பக் கஷ்டமாயிடும். சாயந்திரம் ஆறு மணிக்குள்ள அவரை இங்கே கூட்டிட்டு வந்திருங்க...''

'சரி சார்....''

''பாடியை ரொம்ப நேரம் வெச்சுகிட்டிருக்கும்படியா பண்ணிடாதீங்க. இப்ப மணி பத்து. உடனடியா மதுரை பஸ்ஸைப் பிடிக்க வாங்க... மதுரையிலிருந்து திண்டுக்கல் ரெண்டு மணி நேரப் பிரயாணம். அங்கேயிருந்து பழனி ஒரு மணி நேரம், பழனியிலிருந்து பொள்ளாச்சி ரெண்டு மணி நேரம். பொள்ளாச்சியிலிருந்து கோயமுத்தூர் ஒரு மணி நேரம்.... எப்படியும் நீங்க சாயந்திரம் அஞ்சு மணிக்குள்ளே இங்கே வந்துடலாம்....''

''கண்டிப்பா வந்துடறோம் ஸார்...''—என் குரலில் நடுக்கம்.

போனைக் கீழே வைத்து விட்டார் மானேஜர்.

''என்னடா கார்த்தி... என்ன விஷயம்?... மூஞ்சி யெல்லாம் வேர்த்திருக்கு... ஆபீஸ்ல என்ன சொன்னாங்க?'' — சிவராமன் கேட்டான்.

''நம்ம ரெண்டு பேரையும் உடனே புறப்பட்டு வரும்படி சொல்றாங்க!''

''ராஜபாளையம் வந்த வேலை?''

''அதை அடுத்த மாசம் பார்த்துக்கலாம்னு சொல்றார் மானேஜர். ஏதோ சேல்ஸ் டாக்ஸ் ப்ராப்ளமாம்... அடுத்த பஸ்ஸைப் புடிச்சு சாயந்திரம் அஞ்சு மணிக்குள்ளே ஆபீசுக்கு வரணும்னு சொல்றார்....''

''சேல்ஸ்டாக்ஸ் பிராப்ளம்னா மானேஜரே பார்த்துக்க வேண்டியதுதானே...? இல்லேன்னா ஆபீஸ்ல வேற யாரையாவது பார்க்கச் சொல்லலாமே...? ராஜபாளையத்திலிருந்து நாம போய்த்தான் பிராப்ளத்தைத் தீர்க்கணுமா...? ஆச்சர்யமாயிருக்குடா!''

ரூமைக் காலி பண்ணி, ரிக்ஷா பிடித்து பஸ் ஸ்டாண்டுக்கு வந்தபோது மணி பத்து முப்பது.

மதுரை போகும் பஸ், இஞ்சினை உதற விட்டபடி தயாராய் நின்று கொண்டிருந்தது.

டிக்கெட் வாங்கிச் சீட்டில் உட்கார்ந்ததும் பஸ் புறப்பட்டு விட்டது. நான் விரல் நகங்களைக் கடித்தபடி பஸ்ஸுக்கு வெளியே ஓடும் புளிய மர வரிசையை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

''என்னடா டல்லடிக்கிறே...?'' — சிவராமன் என் தோளை இடித்தான்.

''ஒன்றுமில்லை... உடனடியா நம்ம ரெண்டு பேரையும் வரச்சொல்ற அளவுக்கு அப்படியென்ன பிராப்ளம் இருக்க முடியும்...?''

''போனா தெரியுது...!'' என்று அலட்சியமாய்ச் சொன்னவன் அந்தப்பக்கமாய் வந்த கண்டக்டரைப் பார்த்து, ''லேட்டஸ்ட் சாங்க்ஸா இருக்கிற காஸெட்டைப் போடுங்க கண்டக்டர்...'' என்றான்.

''சகல கலா வல்லவன் போடட்டுமா ஸார்...?''

''ம்... போடுங்க... வால்யூமைக் கொஞ்சம் பெரிசா வையுங்க... பஸ் போடற இரைச்சலில் பாட்டே காதுல விழ மாட்டேங்குது....''

சிவராமனின் சந்தோஷம் எனக்கு அவஸ்தையாய் இருந்தது. சிவராமனின் வீட்டில் இந்நேரம் அவனுடைய மனைவி கழுத்தில் மாலையோடு கிடத்தப்பட்டிருப்பாள். உறவினர் கும்பல் இவனுடைய வருகைக்காகக் காத்துக் கொண்டிருக்கும்.

''நான் அடுத்தபடியாக எடுக்கிற புதுப் படத்திலே உங்களுக்குத்தான் டைட்டில் ரோல்!''

''அப்படியா? படத்தின் பேரென்ன?''

''மாயத் தீவில் பேய்!''

—கீழை அ. கதிர்வேல்





"ஏன் நாதஸ்வரகாரர் காலையிலிருந்தே ராகமாலிகாவே வாசிச்சிட்டிருக்காரு?

"நானும் அததான் விசாரிச்சேன். கல்யாணத்துக்கு வரவங்க கட்டியிருக்கிற ஒவ்வொரு ராகமாலிகா புடவையைப் பார்த்ததும் அவருக்கு தெரியாமலே ராகம் மாறுதாம்."

**ராகமாலிகா**
**பட்டுச் சேலைகள்**

ககன் ஆர்கேட்
பனகல் பார்க் அருகில்
நாகேஸ்வரராவ் ரோடு,
தி. நகர், சென்னை-600 017
(ஞாயிறு கடை உண்டு)

**சந்தோஷ குடும்பத்தின் உண்மை ரகசியம், எப்பொழுதும் நேர்த்தியான தேர்ந்தெடுப்பு.**





இதன் வெளிப்படை உண்மை அனைவருக்கும் ஏற்ற எமது வண்ண வண்ண ஆடைகள் மற்றும் உள்ளாடைகள்.

Manufactured by: **M.L.TEX**
Under Control Briefs & Vests
2-L, Bridgeway Colony
TIRUPUR 638 607.

"Have your best choice of ours at **Aruna Stores**, Venue Salem Exhibition"

பத்துநிமிஷ பஸ் பயணத்திற்குப் பிறகு ஸ்ரீவில்லிபுத்தூர் வந்தது. பஸ் நிலையத்திற்குள் பஸ் நுழைந்ததுமே பால்கோவா விற்கும் பையன்கள் பஸ்ஸைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''ஸார்... ஸார்... ஸ்ரீவில்லிபுத்தூர் பால் கோவா... சொஸைட்டி பால்கோவா.... இருபது ரூபா...'' தலைக்குத் தலை கத்த ஆரம்பித்தார்கள்.

''அடேங்கப்பா... கொள்ளை விலையா இருக்கே...! கார்த்தி, உனக்குப் பால்கோவா வேண்டியிருக்குமே...!''

''எனக்கு வேண்டாம்...''

சிவராமன் தன் வலது கையால் என் முகத்தைப் பற்றித் திருப்பினான். ''நானும் அப்பப் பிடிச்சுப் பார்த்துட்டே வர்றேன்... என்னத்தையோ பறி குடுத்த மாதிரி மூஞ்சியை வைச்சுக்கிட்டு வர்றியே...! ஏண்டா இப்படி இருக்கே...?''

''ஒண்ணுமில்லே... லேசா தலைவலி...''

''மதுரை போனதும் ஒரு தலைவலி மாத்திரையை விழுங்கி சூடா ஒரு காப்பியை உள்ளாரத் தள்ளு... தலைவலி பறுவாயிடும்...''

''என்னோட மனைவி சித்ராவுக்குப் பால் கோவான்னு உயிர்... ஒரு வாய் அதிகமாகவே சாப்பிடுவா...''

அவன் பேசப்பேச எனக்குள் ஏதோ வொன்று கட்டவிழ்ந்து கண்கள் நீரைச் சுரக்க முயல, அந்த முயற்சியை அப்படியே மென்று விழுங்கினேன்.

**ப**ஸ் மதுரையைத் தொட்டபோது மணி 12.15.

பஸ்ஸை விட்டிறங்கித் திண்டுக்கல் போக பஸ் இருக்குமாவென்று பார்த்தேன். அடுத்த ஷெல்டரில் பஸ் காத்திருந்தது.

சூட்கேஸை எடுத்துக் கொண்டு போக முற்பட்டேன்.

சிவராமன் என் தோளைப் பற்றி நிறுத்தினான்.

''தலைவலின்னு சொன்னியே... ஒரு மாத்திரையை விழுங்கி அந்த ஹோட்டலில் காப்பியைக் குடி, வா...!''

நான் நிலைமையைச் சமாளித்துப் புன்னகைத்தேன். ''பஸ்ஸில வர்றப்போ அடிச்ச காத்துல தலைவலி சரியாயிடுச்சு... வா... திண்டுக்கல் பஸ் ரெடியா இருக்கு... போய் விடலாம்...''

''வயத்துல எதையாவது போட்டுக்கிட்டுப் போகலாம்... அந்த ஹோட்டல் தயிர்வடையும் மிக்சரும் ரொம்பவும் பிரசித்தம்... சாப்பிட்டுட்டுப் பஸ் ஏறலாம் வாடா...!''

நான் தயங்கினேன்.

''ஆபீஸ்ல சீக்கிரமா வரச் சொல்லியிருக்காங்க, சிவராமன்!''

சிவராமன் சிரித்தான். ''அதுக்காக வயித்தைக் காயப் போட்டுட்டே பிரயாணம் பண்றதா? என்னடா முட்டாள்தனமா பேசறே...? திண்டுக்கல் போக அஞ்சு நிமிஷத்துக்கு ஒரு பஸ் இருக்கு... ரொம்பத் தான் பறக்கறியே...?''

''அதுக்கில்லே... திண்டுக்கல்லிலே போய்ச் சாப்பாடே சாப்பிட்டுக்கலாம்னு பார்த்தேன். சரி சரி போய்ச் சாப்பிடலாம்....''

மெல்ல நடந்து போய் – ஓட்டலுக்குள் நுழைந்தோம். எதிர் எதிர் நாற்காலிகளில் உட்கார்ந்து கொண்டோம். சிவராமன் டேபிளில் தாளமிட்டபடி கேட்டான்.

''ஆறுமணிக்குள்ளே கோயமுத்தூர்போயிடலாமில்லையா?''

''உம்...''

''அதுக்குள்ளேஆபீஸ் மூடியிருப்பாங்க...''

''உம்...''

''போனதும்... சித்ராவைக் கூட்டிட்டுச் சினிமாவுக்குப் போகணும்... சாயந்தரம் போய் அவ முன்னாடி நின்னு ரொம்பவும் சந்தோஷப்படுவா... 'என்னங்க இது? நேத்தைக்குத்தான் இளம்பி ராஜபாளையம் போனீங்க. ஒருநாள் கூட ஆகல்லே... வந்து திடும்னு நிக்கறீங்களே'ன்னு சொல்லிட்டு மூஞ்சி பூராவும் சிரிப்பா...''

''உம்...''

''என்னடா உம்...? உன் பெண்டாட்டிக்கு மாத்திரம் சந்தோஷமா இருக்காதா? ராத்திரி போனதும் அய்யாவுக்கு மல்லிகைப்பூ வாசம்தான்...'' என்று விலாவில் குத்திவிட்டுச் சிரித்தான் சிவராமன்.

நான் சிரமப்பட்டுப் புன்னகை செய்தேன்.

ஓட்டல் சர்வர் எங்களை நெருங்கினான்.

''இந்தாப்பா..... வெயிட்டர்... ரெண்டு பிளேட் கோதி அல்வா, ரெண்டு செட்

---

1. பூடான் லாட்டரியிலே முதல் பரிசு 83 லட்சம் தமிழ் நாட்டிலே 23 பேர் கூட்டணிக்குக் கெடச்சுதாமே!



2. அது சரி... ஒருத்தருக்குன்னு இல்லாமே இப்படி ஆளுக்குக் கொஞ்சமா பிரிச்சுக்கிட்டது ஒரு வகையிலே நல்லதுதான்!



தயிர்வடை. சாப்பிட்டானதும் ஸ்ட்ராங்கா ரெண்டு காப்பி...''

சிவராமன் சொல்லச் சர்வர் நகர்ந்தான்.

ஒவ்வொரு விள்ளலையும் விஷமாய்ப் பாவித்து தொண்டையில் இறக்கினேன். குமட்டியது. அடிவயிற்றில் புரண்ட சங்கடம் சாப்பிட்டதை வாந்தியாக்க முயன்றது.

சிவராமன் மளமளவென்று தின்று முடித்து வாஷ் பேஸினுக்குப் போனான்.

நான் சாப்பிடத் திணறிக் கொண்டிருந்த கோதி அல்வாவையும், தயிர்வடையையும் அந்தப்பக்கமாய் வந்த க்ளீனர் பையனின் பக்கெட்டுக்குள் தள்ளிவிட்டுக் கையைக் கழுவிக் கொள்ள எழுந்தேன்.

திண்டுக்கல்லில் இறங்கிப் பழனி போகும் பஸ்ஸைப் பிடித்தபோது மத்தியானம் இரண்டுமணி. சிவராமன் ஆர்வமான குரலில் கேட்டான்.

''பழனியில் இறங்கி மலைக்குப் போயிட்டுப் போகலாமா...?''

''ஊ... ஹூ...ம்... அதுக்கெல்லாம் நேரமில்லே சிவராமா...! நாம உடனடியா கோயமுத்தூர் போகணும்...''

நல்லவேளையாய்ப் பழனி போய்ச் சேர்ந்தபோது கோயமுத்தூர் போகும் சேரன் பஸ், ஸ்டாண்ட் வாசலிலேயே கிடைத்தது. நான் ஓடிப் போய் ஏறிக்கொள்ள' சிவராமனும் வேறு வழி இல்லாமல் ஏறினான்.

பஸ் சண்முகநதி பாலத்தைத் தாண்டியதும், சிவராமன் சீட்டில் பின்னுக்குச் சாய்ந்து கொண்டு தூங்க ஆரம்பித்தான். நிஜமாகவே நல்ல தூக்கம்.

மனைவி இறந்த விஷயம் இவனுக்குத் தெரிந்திருந்தால் இப்படித் தூக்கம்வருமா..?

பஸ் கோயமுத்தூர் சென்டிரல் பஸ் ஸ்டாண்டுக்குள் நுழைந்தது.

சிவராமன் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

''சி... சி... சிவராமா.... உன்கிட்டே ஒரு விஷயம் சொல்லணும்...'' சிவராமன் என்னைக் கேள்விக் குறியோடு ஏறிட்டான்.

''என்னடா?...''

''அதிர்ச்சியான விஷயம்... மனசுல தைரியத்தை இழந்துடாதே... ராஜபாளையத்துல பஸ் ஏறும்போதே சொல்லியிருக்க வேண்டிய விஷயம்... நீ அந்த ஷாக் ந்யூஸ்ல கொலாப்ஸ் ஆயிடுவியோன்னு எனக்குள்ளே பயம்...! உன்னோட மனைவி ஹார்ட் அட்டாக்கில இறந்துட்டதா நம்ம ஆபீஸ்லயிருந்து போன் பண்ணியிருந்தாங்க...''

விலுக்கென்று நிமிர்ந்தான் சிவராமன்.

ஆணியடித்த மாதிரியான பார்வை என் முகத்தில் பதிந்தது. கண்களில் பாதரச குண்டுகளாய் நீர் எட்டிப்பார்க்க — உதடுகளை மெதுவாய் அசைத்தான்.

''எப்போ...?''

''காலையில ஆறு மணிக்காம்...''

''என்னோட மனைவி இறந்ததை என்கிட்ட சொன்னா என்னால தாங்கிக்க முடியாதுன்னு நினைச்சு... கடந்த எட்டு மணி நேரமா அந்தச் சுமையை நீ தாங்கிட்டு வந்திருக்கே... இல்லையா கார்த்திக்...!'' —அழுகிற குரலில் கேட்டான் சிவராமன்.

''ஆமா!'' நான் தலையசைத்தேன்.

கண்ணீரோடு அவன் கசப்பாய்ச் சிரித்தான். ''என் சித்ரா செத்துடுவான்னு மூணு மாசத்துக்கு முந்தியே எனக்குத் தெரியுண்டா கார்த்தி!.... அவளுக்கு ப்ளட் கான்சர். டாக்டர் கிரிஜா நாராயணன் அவளுக்கு என்னிக்கோ டேட் வெச்சுட்டார். சித்ராவோட மரணம் எந்த நிமிஷமும் நேரலாம்கிறது என்னோட உடம்புல இருக்கிற ஒவ்வொரு செல்லுக்கும் தெரியும்...! அவளோட மரணத்தாலே ஏற்படப் போற அதிர்ச்சியை நான் என்னிக்கோ ஜீரணம் பண்ணிட்டேன்... போலாமா...? பஸ் காலியாயிடுச்சு...'' — பெருமூச்சை அனலாய் விட்டபடி —

சிவ்ராமன் சூட்கேஸோடு தளர்ந்துபோய்க் கீழே இறங்கினான். தொண்டையில் அழுகை அடைக்க அடைக்கக் கேட்டான்.

''பாடியை எடுத்திருக்க மாட்டாங்களே...?''

''இல்லே... நீ போனப்புறம் தான்...''— நான் முனகினேன்.

சிவராமன் தூரத்தில் நின்றிருந்த ஆட்டோவைக் கைதட்டிக் கூப்பிட்டுக் கொண்டிருந்தான். நான் மனம் லேசாகிப் போய்ச் சுலபமாய்க் காற்றைச் சுவாசிக்க ஆரம்பித்திருந்தேன். சிவராமன் இனி தாங்கிக் கொள்வான் என்கிற தைரியம் என்னுள் பிறந்தது.

---

3. என்னது? அந்த லாட்டரியோட ஐந்து கோடி ரூபாய் டிக்கெட்டுலே மூணு கோடி ரூபாய் டிக்கெட்டு தமிழ் நாட்டுலே தான் விற்பனையாச்சா?



4. அப்படின்னு வரவு எட்டணு, செலவு பத்தணு கணக்கு தான்! இப்படியே போச்சன்னு கடைசியிலே தமிழ்நாடு 'தந்தனு' பாடவேண்டியதுதான்!''

-அ. குமார்



# வீடியோ விவகாரம்

**விசிட்டர் அனந்த்**

**வீ**ட்டுக்குள்ளிருந்தபடியே நீங்கள் விரும்பும் சினிமாப் படங்களைப் பார்த்து ரசிக்கலாம். அதற்குத் தேவை ஒரு டெலிவிஷன் பெட்டி, சில வீடியோ கேஸட்டுகள். இந்த வீடியோ கேஸட்டுகளை விலைக்கே வாங்கிக் கொள்ள வேண்டும் என்று அவசியமில்லை. விலைக்கும் கிடைக்கும். (சினிமாவின் ''கிராக்கியை'ப் பொறுத்து சில நூறு ரூபாய் விலை.) தவிர, 'லெண்டிங் லைப்ரரி' மாதிரி வீடியோ கேஸட்டுகளை வாடகைக்கும் வாங்கலாம்.

இப்போது சென்னை நகரில் மூலைமுடுக்கெல்லாம் புற்றீசல் போல வளர்ந்து மற்ற நகரங்களிலும் கிளைவிட்டு வீடியோ வியாபாரம் பரவிக் கொண்டிருக்கிறது. சில இடங்களில் இவற்றில் அங்கத்தினராவதற்கு நூறு ரூபாய் நுழைவுக் கட்டணம். இந்தத் தொகை திரும்பி வராது. ஒவ்வொரு வீடியோ கேஸட்டிற்கும் வாடகை பதினைந்து ரூபாய். வைத்திருக்க இத்தனை நாட்கள் தான் என்று கணக்கு உண்டு. இப்போது போட்டியின் காரணமாகச் சில இடங்களில் பத்து ரூபாய் வாடகைக்குக் கூட கிடைக்கிறது.

வீடியோ லைப்ரரிகளில் ஆங்கிலம், இந்தி, தமிழ் மற்றும் இதர மொழிகளில் 'ஹிட்'டான படங்களின் பட்டியலை வைத்திருக்கிறார்கள். இதுவரை சென்னையில் திரையிடப்படாத படங்கள் கிடைப்பது இந்த நிலையங்களின் சிறப்பம்சம். அதுமட்டுமல்ல, சென்ஸாரில் வெட்டப்பட்ட பகுதிகளைத் துண்டிக்காமலே உள்ள 'ஒரிஜினல்' சினிமாக்கள், இதுவரை 'ரிலீஸ்' ஆகாமல் பெட்டிக்குள் முடங்கிக் கிடக்கின்ற தமிழ் சினிமாக்கள், சென்ஸாரே செய்யப்படாத சினிமாக்கள் — எல்லாம் கூட வாடகைக்குக் கிடைக்கின்றன. இவற்றிற்கு தனி 'ரேட்.'

சில இடங்களில் ஆபாச சினிமா படங்கள் (ப்ளூ ஃபிலிம்) அதிக வாடகைக்கு ரகசியமாகக் கொடுக்கப்படுகின்றன. அவற்றைச் சிலர் ரகசிய இடங்களில் போட்டுக்காட்டி, பார்வையாளர்களிடம் எக்கச்சக்கமாகப் பணம் வசூலிக்கின்றனர். அண்மையில் இது தொடர்பாகப் போலீஸ் இலாகா சிலரைக் கைது செய்திருக்கிறது.

பல ஆங்கிலப் படங்கள் வெளிநாடுகளிலிருந்து கடத்தி வரப்படுகின்றன. அவற்றை 'ஜெராக்ஸ்' பிரதி எடுப்பது போல் வெகு சுலபமாகப் பிரதிகள் எடுத்து விடுகின்றனர். சில தமிழ், இந்திய மொழி சினிமாக்களை திருட்டுத்தனமாகத் தியேட்டர்களில் பிரதி எடுத்து விடுகின்றனர். இதனால் புதிய படங்களின் வசூல் பாதிக்கப்படுகிறது. கள்ளக் கடத்தலுக்கும் வழிவகுக்கப்படுகிறது. வெளிநாடுகளிலிருந்து படங்கள் எப்படிக் கடத்தி வரப்படுகின்றனவோ, அதேபோல நம் நாட்டிலிருந்தும் வெளிநாடுகளுக்குப் பெருமளவில் திரைப்படங்கள் கடத்தப்படுகின்றன.

வளர்ந்து வரும் விஞ்ஞான உலகில் வீடியோவின் உபயோகம் அத்தியாவசியமானது தான். அதேசமயம், இதனால் ஏற்படும் அபாயங்களையும் விரும்பத்தகாத விளைவுகளையும் கட்டுப்படுத்தியாக வேண்டும். அதற்கேற்ப சட்டங்களை இயற்றித் தண்டனைகளை வகுத்தாக வேண்டும். இல்லையென்றால், திரைப்படங்களிலிருந்து எவற்றையெல்லாம் வேண்டாம் என்று சென்ஸார் குழுக்கள் வெட்டியெறிகின்றனவோ, அவற்றையெல்லாம் பார்க்கிற பலாபலன்களையும் அனுபவித்தாக வேண்டும். சினிமாக்களுக்கு சென்ஸார் இருப்பது போல் பொதுப் புழக்கத்திற்கு விடப்படும் இந்த வீடியோ —கேஸட்டுகளுக்கும் ஒரு சென்ஸார் உடனடியாகத் தேவை.

---

''படுக்கையறைக் காட்சிகள் நிறைந்த படம்னு விளம்பரம் பண்ணியிருக்காங்களே...படம் அவ்வளவு செக்ஸியாகவா இருக்கு?''

''அட போப்பா...நிறைய படுக்கை இருக்கிற ஆஸ்பத்திரியிலே கதை நடக்கிற மாதிரி படம் எடுத்திருக்காங்க அதுக்குத்தான் அப்படி விளம்பரம்.''

—ஜி. எஸ். பாண்டியன்



**கிருமிகளைக் கொல்லும் சக்தி வாய்ந்த ஆண்டி பயாடிக் மருந்துகளை அனாவசியமாகப் பலர் பயன்படுத்துகிறார்கள் என்று குற்றம் சாட்டுகிறார் டாக்டர் எம். எஸ். வேங்கடராமன்.**

''எனக்குத் தெரிந்த ஒரு கேஸ். ஓர் அம்மாளுக்குப் பல் வலி தாங்க முடியாமல் இருந்தது. நாற்பத்தைந்து வயசு இருக்கும். பக்கத்தில் இருந்த பல் வைத்தியர் ஒருவரிடம் போனார். அவரும் உடனே ஒரு பெனிஸிலின் மாத்திரையை எடுத்துக் கொடுத்தார். அந்த அம்மாள் மாத்திரையை விழுங்கி விட்டு வீட்டுக்கு வந்தார். பதினைந்தே நிமிடங்கள்தான். பல்வலி மட்டும் தீரவில்லை: அந்த அம்மாளே தீர்ந்தாயிற்று.

''திடுக்கிட வைக்கும் விஷயம்தான் இது. இந்தக் கொலைக்கு யார், அல்லது எது காரணம்? அந்த அம்மாளுக்குப் பெனிஸிலின்



ஏற்காத மருந்து — அலர்ஜி என்பதை டாக்டர் கவனிக்கவில்லை. தவிர எதற்கெடுத்தாலும் ஆண்டி பயாடிக் தருவதும் ஆபத்தானது தான். மயிலாப்பூரிலிருந்து மந்தைவெளிக்குப் போகிறவன் காரில் போனாலே போதும். அதை விட்டு விட்டு வசதி இருக்கிறது என்பதற்காக ஹெலிகாப்டரில்தான் போவேன் என்று ஒருவன் அடம் பிடித்தால் எவ்வளவு பைத்தியக்காரத்தனம்? அது போன்றது தான். எந்த வியாதியானாலும் 'மைஸின்' மருந்துகளைத் தருவதும்'' என்கிறார் டாக்டர்.

சாதாரணமாக ஜலதோஷம், காய்ச்சல் போன்றவை 'வைரஸ்' கிருமிகளால் வருபவைதான். இவற்றுக்கு ஆண்டி பயாடிக் உதவாது. ஏனெனில் இந்த மருந்துகளின் விஷயமே அலாதியானது. ஒரு குறிப்பிட்ட ஆண்டிபயாடிக் மருந்து குறிப்பிட்ட சில கிருமிகளை மட்டும்தான் அழிக்கும். மற்றக் கிருமிகளின் மீது அது செயல்படாது. சில கிருமிகள் ஆண்டி பயாடிக் மருந்தையே உணவாகக் கொண்டு ஊட்டம் பெற்று வளரும்.

நம்முடைய உடம்பின் குடல் பகுதியில் லட்சக் கணக்கான நுண் கிருமிகள் இருக்கின்றன. இவற்றில் நம்மை உயிர் வாழ வைக்க மிகவும் அவசியமான பல கிருமிகளும் இருக்கின்றன. தேவையில்லாத ஆண்டி பயாடிக் மருந்து குடலில் சேர்ந்து அங்குள்ள உடல் நலத்துக்கு அவசியமான நல்ல கிருமிகளையும் கொன்றுவிடுகின்றன. ஆபத்தான விளைவுகளை ஏற்படுத்துகின்றன. சிறு சிறு காளான்கள் வளரத் தொடங்கி இரத்த ஓட்டத்தையே அவை பாழாக்கி விடுகின்றன.

டைபாய்டு, காச நோய் உள்ளவர்கள் தவிர சர்க்கரை வியாதி, புற்று நோய் கண்டு உடல் நிலை தளர்வுற்றதால் கிருமிகளை எதிர்த்துப் போராடும் சக்தியற்றவர்கள் — இவர்களுக்கு ஆண்டி பயாடிக் தேவைப்படுகிறது.

மற்றபடி சாதாரண ஜுரம், தலைவலி, இன்புளுவன்ஸா காய்ச்சல், ஜலதோஷம்,



மணல்வாரி போன்றவற்றுக்கு ஆண்டிபயாடிக் தருவது கூடாது.

''ஃப்ளூ காய்ச்சலுக்குச் சாதாரணமாக ஆஸ்பரின் தவிரத் திட ஆகாரமாகத் தந்தாலே ஆறு நாட்களில் நோய் குணமாகி விடும். இது எங்கே நிமோனியாவாக மாறி விடுமோ என்று மிரண்டு போய்த் தடுப்புக்காக என்று ஆண்டிபயாடிக் தரப்போனால் நோய் குணமாவதைவிட, மருந்துகள் காரணமான எதிர் விளைவுகள் ஏற்படுவதைத் தவிர்ப்பது கடினம்.

நோயாளிகள், டாக்டரிடம் தங்களுக்கு உள்ள பழக்கம் காரணமாக, ''டாக்டர்! இந்த மருந்தைச் சாப்பிடலாமா?'' என்று கேட்பதும், அவரைத் திருப்திப் படுத்துவதற்காக டாக்டரும் ''ஆகா! பேஷாய்ச் சாப்பிடலாமே'' என்று எழுதித் தருவதும் கூட நடக்கிறதே. சில கட்டங்களில், நோயாளி கேட்கிற மருந்தை நாம் தராவிட்டால் எங்கே கேஸ் நம்மை விட்டுப்

# இந்த ஆண்டி-பயாடிக்குகள்

போய்விடுமோ என்றுகூட டாக்டர்கள் யோசிக்கக் கூடும்.

சஸ்திர சிகிச்சையால் பத்துக்கு ஒன்று என்கிற விதத்தில் ஆபரேஷன் புண்ணில் சீழ் பிடிக்கக் கூடும். இதற்காகச் சில டாக்டர்கள் எல்லா ஆபரேஷன் கேஸ்களுக்கும் ஆண்டி பயாடிக் தருகிறார்கள். இது தவறு. சீழ்பிடித்தாலும் எந்தக் கிருமிக்கு எந்த ஆண்டி பயாடிக் வேலை செய்யும் என்பதைக் கண்டறிந்து, அதன் பிறகே, அவசியமிருந்தால் அதைத் தர வேண்டும்.

மருந்துக் கடைகளில், இந்த ஆண்டி பயாடிக் மருந்துகள் சர்வ சாதாரணமாகக் கிடைக்கின்றன. சட்டப்படி, டாக்டர்கள் தருகிற பிரிஸ்கிரிப்ஷன் பேரிலேயேதான் இவை விற்கப்பட வேண்டும். ஆனால் வாடிக்கைக்காரர்கள் என்று ஆகிவிடுகிற நோயாளி நண்பர்கள் கேட்கிறபோது கடைகளில் கொடுத்து விடுகிறார்கள். எப்போதோ, ஏதோ ஒரு நோய்க்கு என்று டாக்டர் தந்த மைஸின் காப்ஸூலை இரண்டு மூன்று வாங்கி விழுங்கி விட்டு நோய் குணமடையாத நிலையில் டாக்டரிடம் வருகிறார்கள். ''டாக்டர்! நானு டெட்ராஸைக்ளின் சாப்பிட்டேன். சித்தத் தேவலையா யிருந்தது. இப்போ மறுபடி ஜாஸ்தியாயிடுத்து'' என்கிறார்கள்.

''உம்மை இதை யாருய்யா சாப்பிடச் சொன்னது?'' என்று எத்தனை டாக்டர்கள் நோயாளிகளைக் கண்டிக்கிறார்கள் என்பது தெரியவில்லை. இது ஒரு மோசமான பழக்கமாகி விட்டது. இப்படிக் கண்டபடி சாப்பிடுவதால் பிற்பாடு தேவையானபோது பயன் தராத அளவு ஆண்டி பயாடிக்கின் வீரியம் குறைந்து விடுகிறது.



''தெருவுக்குக் கம்பர் தெரு என்றிருந்ததை ஏன் 'பம்பர் தெரு' என்று மாற்றியிருக்காங்க?''
''அதுவா. இந்த வீதியிலேதான் லாட்டரி பம்பர் பரிசு வாங்கின ஏழெட்டுபேர் குடியிருக்காங்க. அதனாலே மாற்றிட்டாங்க!''

ஈரோடு மாரிமுத்து

குளோரோமைசெடின் என்றொரு மருந்து. எல்லோருக்கும் தெரியும். டைபாய்டு நோய்க்குத் தரவேண்டிய மருந்து. ஆனால் இது இரத்த சோகையை உண்டாக்குகிறது என்று அமெரிக்க அரசாங்கம் தடை செய்துள்ளது. அங்கெல்லாம் மருந்துப் பொருள் கட்டுப்பாட்டுச் சட்டங்கள் வெகு தீவிரமானவை. ஏதாவது ஒரு மருந்தால் கெடுதல் வந்து விட்டது என்று நிரூபிக்கப்பட்டு விட்டால் தொலைந்தது - மருந்து தயாரிப்பாளர்கள் லட்சக் கணக்கான ரூபாய்களை நஷ்ட ஈடாகத் தரவேண்டி வரும்.

ஆண்டி பயாடிக் மருந்துகளைத் தருவதில் பின்கண்ட எச்சரிக்கைகள் மிகவும் அவசியமாகக் கவனிக்கப்பட வேண்டும்.

—தருவது அவசியம்தானா?
—ஆண்டி பயாடிக் மருந்து தருவதால் ஏற்படக் கூடிய நன்மையை விடத் தீமை குறைவானதாய் இருக்குமா?
—சரியான ஆண்டி பயாடிக் மருந்துதான் தரபபடுகிறதா?
—போதுமான அளவு மருந்து தரப்படுகிறதா?
—தரப்பட்ட அவ்வளவு மருந்தையும் நோயாளி உட்கொள்ளுகிறாரா?
—மருந்து உட்கொண்ட பிறகு நோயாளிக்குக் கோளாறுகள் ஏதேனும் ஏற்படுகின்றனவா?

—சுப்ரபாலன்

# உணர்வுகள் உறங்கட்டும்!

வினோதானந்த்

**போட்டிக்கதை 3**

அன்றைய நேர்முகத் தேர்வில் ஏமாந்துவிடக் கூடாது என்பதில் அவன் உறுதியாக இருந்தான்.

கையகல மூளையின் கட்டுவிரல் நகத் தளவு ஹைப்போதாலமஸின் கட்டுப் பாட்டுக்குள் நிறைய விஷயங்களை,



விவரங்களை அவன் கடந்த பத்து நாட்களில் சிறுகச் சிறுகக்கொணர்ந்து சேர்த்திருந்தான்.

பற்றியெரியும் அஸ்ஸாம், காலிஸ்தான் பிரச்னைகள், வல்லரசுகளின் ஆயுதப் போட்டிகள், நடந்து முடிந்த ஏஷியாடின் சாதனைகள், அணிசேரா நாடுகளின் மாநாட்டு தீர்மானங்கள், தேசப்படத்தில் சின்னச் சின்னப் புள்ளிகளாய்த் தெரியும் நாடுகள், மத்திய மாநில அமைச்சரவைகள்....

இவ்வளவையும் தாண்டி வெளியே வந்து, அகில இந்திய சிறந்த நட்சத்திரத்திற்கான

விருதுக்குரியவர் கமலஹாசனா? ஸ்ரீதேவியா?... சிலுக்கின் இடத்தை அனுராதா கைப்பற்றுவாரா?... இதுமாதிரியான கேள்விகளுக்கும் அவனிடம் பதில்கள் தயாராக இருந்தன.

போதாதா?

கூடவே வாசல்வரை வந்தாள் அகிலாண்டம்.

''இந்தத் தடவை கோட்டை விட்டிடாதேடா...''

இது அவனுக்குப் பதினைந்தாவது நேர்முகத் தேர்வு.

''சரி...'' எனச் சிரித்தபடி தலையசைத்து விட்டு அவன் நடந்தான்.

மூன்று தங்கைகள், ஒரு தம்பி, அப்பா, அம்மா, அவன்... இத்தனை பேர் அடங்கிய ஒரு திட்டமிடப்படாத குடும்பத்தில் அப்பாவுக்கு அடுத்தபடி சம்பாதிக்கும் ஓர் இயந்திர பதவிக்காக அவன் மேற்கொண்டு வரும் முயற்சிகள் அதிகம்தான்.

யோசித்தபடி நடந்தவன் பேருந்து நிலையத்தை அடைந்தான். பேருந்து ஒன்று தயாராக இருந்தது. நகரத்தின் மொத்த ஜனத் தொகையும் அந்த ஒரு வாகனத்துக்குள் அடைக்கப்பட்டு விட்டதோ என்று எண்ணும்படி மனிதத் தலைகளின் நெருக்கங்கள்.

வேலை கிடைத்து விட்டால் தினமும் இப்படி ஒரு நரக சுகத்தைத் தான் அனுபவிக்க வேண்டியிருக்குமே என நினைத்தான். 'பேசாமல் ஓட்டுநர் வேலைக்குப் பயிற்சி மேற்கொண்டிருக்கலாம். அந்த ஓர் இடம்தான் சற்றுச் சுதந்திரத் தன்மை உடையதாக இருந்தது.'

சிவராமன் இரண்டு மணிக்கெல்லாம் வீடு திரும்பி விட்டார்.

கையிலிருந்த குடையையும், டிபன் பாக்சையும் அகிலாண்டத்திடம் கொடுத்துவிட்டுச் சன்னக்கம்பியில் மடித்துப் போட்டிருந்த துண்டை எடுத்து உதறி வியர்த்திருந்த முகத்தைத் துடைத்தபடியே சொன்னார்:

''வாசு போன் பண்ணினான். மாலதியைப் பெண் பார்க்க நாலு மணிக்கெல்லாம் அவங்க வராங்களாம்...''

''அப்படியா?...''

ஏதோ ஓர் எதிர்பார்ப்பின் நிறைவான உச்சகட்டம் போல் அகிலாண்டத்தின் முகம் பூரித்துப் போனது.

''மாலதி!...'' என்று கொல்லைக் கட்டை நோக்கிக் குரல் கொடுத்தாள்.

பத்துப் பாத்திரங்களோடு சாம்பல் தடவிய விரல்களால் பேசிக் கொண்டிருந்த மாலதி, அவசரம் அவசரமாகக் கைகளைக் கழுவிக் கொண்டு உள்ளே ஓடிவந்தாள்.

''மடமடன்னு வேலையை முடி. முகத்தைக் கழுவிக்கோ. தலைசீவிக்கிட்டு நல்ல புடவையா பளிச்சுன்னு பார்த்தெடுத்து உடுத்திக்கோ. நாலு மணிக்கு உன்னைப் பார்க்கவராங்க... ஏங்க! பூ வாங்க மீனுவைக் கடைக்கு அனுப்பவா? ரவாவும் வாங்கணும் போலிருக்கே!...''

''வர வழிதானே? மீனுவையே வாங்கிட்டு வரச் சொல்லு...''

''சுகவரா!... இந்த இடமாவது குதிர்ந்திட்டா நல்லாயிருக்கும்...''

அங்கலாய்ப்பின் இரண்டாவது கோணம் அது.

மூன்றரைக்கெல்லாம் மாலதி தன்னை முழு மனுஷி ஆக்கிக் கொண்டுவிட்டாள். சம்பிரதாயச் சிற்றுண்டிகளின் சங்கம மணம் அடுக்களையைத் தாண்டி வந்து நாசியில் மோதிற்று.

இன்றைக்கு அவளைப் பார்க்க வருபவன் பன்னிரண்டாவது கதாநாயகன்.

இதுவரை—

''படிப்பு போதாது... ஒரு பி. ஏ., பி. காம்... இப்படி...''

''சீர் வரிசையில கொஞ்சம் தாராளமா இருந்தா...''

''பிள்ளையாண்டானோட தோள்பட்டைக்குக் கூட வரமாட்டா போலிருக்கே!...''

''வேலைக்குப் போறவளா இருந்தாப் பரவாயில்லே...''

இழுவைகள், முகச்சுளிப்புகள், எதிர்பார்ப்புகளின் எட்ட முடியாத உயரங்கள்.. இப்படிப் பல்வேறு காரணங்களால் இதற்கு முன் வந்த பதினொன்றும் தட்டிப் போயின.

'இன்றைக்கு வருகிறவன் மனசிலாவது எப்படியும் புகுந்து கொண்டுவிட வேண்டும்... மாலதியின் மனம் ஆசையாய் முனகியது. எல்லாம் அம்மாவின் அங்கலாய்ப்பின் பின்னணிதான்.

நேற்றைக்குத்தான் அவன் ஒரு புத்தகத்தில் படித்தான்.

நேர்முகத் தேர்வுக்குச் செல்பவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய சில முக்கியமான விதிமுறைகளை அது விளக்கமாகக் கூறியது.

பேட்டி காண்பவர்களை நேருக்கு நேர் சந்தித்ததும் தலையை லேசாகச் சாய்த்து வணக்கம் தெரிவி. அவர்கள் சொன்ன பிறகே இருக்கையில் அமர். அவர்கள்


பத்திரிகை ஆசிரியர்: உங்களோட மர்ம நாவலை மையமா வெச்சு வாசகர்களுக்கு ஒரு போட்டி வெச்சிருக்கோம்!
எழுத்தாளர்: அப்படியா?
ப. ஆசிரியர்: ஆமாம். அதோட ஒரிஜினலை எழுதினது யார்னு கண்டு பிடிக்கணும்கிறதுதான் போட்டி!
—இளை அ. கதிர்வேல்

கேட்கும் கேள்விகளில் எதற்காவது விடை தெரியவில்லை என்றால் ஒப்புக் கொள். தவறான விடைகளைக் கூறிச் சமாளிக்க முயன்றால் எதிர்மறைவான விளைவுகளையே உண்டு பண்ணும். அமைதியாகப் பேச. பதில் சொல்லும்போது குரலில் அளவான ஏற்ற இறக்கங்கள், சொற்களை உச்சரிக்கையில் அதில் கம்பீரமும், தன்னம்பிக்கையும், அதேசமயம் பணிவும், தன்னடக்கமும் பளிச்சிட வேண்டும்.

கண்ணாடி முன்நின்று ஒத்திகை பார்த்துக் கொண்டான்.

அந்த அரைமணி நேர ஒத்திகையில் அவனுள் ஓர் அசாத்திய நம்பிக்கையும், எதிர்காலத்தைப் பற்றிய வளமான கற்பனைகளும் கொடிகட்டிப் பறக்க ஆரம்பித்தன.

அவனைப் பார்க்க வருகிறவர்கள் அவனுக்குப் பாடத் தெரியுமா எனக்கேட்கலாம். பாடவும் சொல்லலாம்.

வருகிறவனுக்குப் பிடித்த ராகம் எதுவாக இருக்கும்? இல்லை, சங்கீத ஞானமே இல்லாமல் ஒரு சூனியப் பிரதேசத்தைச் சேர்ந்தவனாக இருப்பானோ?

'ஈசுவரா!... இந்தத் தடவை இவனை ஏமாத்திடாதேப்பா...'

மனசு பிரார்த்தித்து அழுதது.

நேர்முகத் தேர்வு முடிந்து, வழியில் எதிர்ப்பட்ட நண்பனோடு துணை சேர்ந்து கொண்டு அவனுடைய கைக்காசில் பகற்காட்சி திரைப்படம் பார்த்துவிட்டு, வாடிய வயிற்றுக்குக் கொஞ்சம் தாராளமாகவே, அவனுடைய கைக்காசில் சிற்றுண்டி தந்து உபசரித்து அதன்சிறப்பைத்தணித்துவிட்டு, மாலைக் காற்றின் மோகன ஆலாபனையில் உளச் சூழலின் புழுக்க நிலை மறந்து நடந்தபடி...

வீடு வந்து சேர்ந்தபோது மணி ஏழரை.

''இண்டர்வியூ முடிஞ்சதும் நேரா வீட்டுக்கு வர வேண்டியதுதானே? வேகாத வெய்யில்ல ஊரெல்லாம் மேய்ஞ்சிட்டு வரணுமா...?'' என்றார் அப்பா.

அப்பா நிதானமாகச் சன்னக் குரலில் இட்டிய இட்டலில் வீரியம் குறைந்திருந்ததால் அதிகம் பாதிக்கப்படாதவனாக உள்ளே சென்று முதுகுப்புறம் வியர்வையால்தெப்பலாகிப் போயிருந்த சட்டையைக் களைந்து விட்டு ஒரு துண்டைப் போர்த்தியபடி வெளியே வந்தான்.

மிச்சமிருந்த கேசரியில் கொஞ்சம் பஜ்ஜியில் கொஞ்சம் ஒரு தட்டில் எடுத்து வைத்தாள், அகிலாண்டம்.

''ஓ!... மாலதியைப் பெண் பார்க்க வந்தாங்களோ?...'' என்று கேட்டான்.

''ஆமாம், அதுசரி, போன காரியம் என்ன ஆச்சு? என்ன கேட்டாங்க? ஒழுங்கா பதில் சொன்னியா?''

''உங்க அப்பா எங்கே வேலை பார்க்கிறார்? என்ன சம்பளம்? ரிடையராக இன்னும் எத்தனை வருஷம் மிச்சமிருக்கு? கூடப் பிறந்தவர்கள் எத்தனை பேர்? அவங்கள்லாம் என்ன படிச்சிருக்காங்க?.... ...ம்ஹூம்... பேசாம அப்பாவையே இண்டர்வியூவுக்கு அனுப்பியிருக்கலாம். சம்பந்தமில்லாத கேள்விகள். ரேஷன் கார்டு கொடுக்க விவரங்கள் சேக்கிற மாதிரி....''

சிரித்தான்.

''அப்புறம்...?''

''அப்புறம் என்ன? ஒரு வாரத்துல தபால் போடறதா சொன்னாங்க...''

மாலதி வந்தாள்.

''வந்தவன் எப்படி? பரவாயில்லையா? உனக்குப் பொருத்தம்தானா? கேசரியும், பஜ்ஜியும் தின்னுப்பிட்டு என்ன சொன்னாங்க?...''

''ஒரு வாரத்துல தபால் போடறதாச் சொன்னாங்க...!''

''ஓஹோஹோ!... இண்டர்வியூவுக்குப் போறதும், பெண் பார்க்கப் போறதும் ஒரே மாதிரி விஷயங்களாப் போச்சு...''

உரக்கச் சிரித்தான்.

அகிலாண்டம் நெடுமூச்செறிந்தாள்.

ஏழாம் நாள்.

முதல் தபாலில் சிவராமனுக்கு வந்த கடிதம் ஒரு சந்தோஷ முடிவை நீல எழுத்துக்களில் வெளிப்படுத்தியிருந்தது.

மாலதியை அவர்களுக்கு ரொம்பவும் பிடித்து விட்டதாம். பரிபூரண சம்மதம் என்று கடிதம் தலையசைத்துச் சொல்லிற்று.




**அட்டையில்...**

உடைந்த மரக் கிளைகளில் செயற்கையான பூக்களைத் தயாரித்து அலங்கரிக்கும் கலையில் தனிப் பயிற்சி பெற்றிருக்கிறார், குமாரி ருக்மிணி ராமமூர்த்தி. இதற்காக ஆர்கண்டி, ஸாடின், வெல்வெட் போன்ற துணிகளைப் பயன்படுத்துகிறார்.

இது போன்ற புஷ்பங்களை அலங்கரித்து (சில ஜப்பானிய இகபானா முறை) ஓரிரண்டு நாள் முதல் தடவையாகத் தம் வீட்டிலேயே கண்காட்சி நடத்தினார். நல்ல வரவேற்புக் கிடைத்தது. இக்கலையை இவருக்குச் சொல்லித் தந்தவர்: கலைஞர் ராஜகோபாலன்.

பாதிக், பெயிண்டிங், நாட்டியம் (வழுவூராரின் சிஷ்யை) போன்றவற்றிலும் ஆர்வம் கொண்ட ருக்மிணி, ஊத்துக்காடு பரம்பரையில் வந்தவர். தற்போது பி. எஸ். நாராயணசாமியிடம் கர்நாடக சங்கீதமும் பயின்று வருகிறார்.

—சாருகேசி, தமயந்தி
வண்ணப்படம்: சுபா

அகிலாண்டத்திற்குச் சந்தோஷம் பிடிபட வில்லே.

''இதுதான்னு அவனுக்கு எழுதியிருக்க றப்ப நம்ம பிரயத்தனங்கள் என்ன செய் யும்?...''

''பரவாயில்லே, உனக்குச் சாதகமா ரிஸல்ட் வந்திட்டுது...'' என்றான்.

''அடுத்த தபால்ல, இல்லேன்னு... நாளேக்காவது உனக்கும் ஒரு கடுதாசு வரும் பார். நீயும் ஜெயிக்கத்தான் போகிறாய்...''

நிகழும் ருத்ரோத்காரி ௵ வைகாசி மீ 18௳ (1.6.1983) புதன்கிழமை சிரவண நட்சத்திரம் கூடிய சுபயோக சுபதினத்தில் உதயாதி நாழிகை 7¼க்கு மேல் 11¼க்குள் (காலே மணி 9—க்கு மேல் 10.30—க்குள்) கடக லக்னத்தில்...

ஒரு பத்திரிகையை ஒளித்து வைத்துக் கொண்டு நாலாவது முறையாகப் படித்துக் கொண்டிருந்தாள் மாலதி.

''மாலதி! அவரோட மனசறிஞ்சு நடந் துக்கோ. அந்த வீட்டு ஜனங்களே அனுசரிச் சிட்டுப்போ. ஒரு குடும்பம்னு ஆயிரம் நல் லது கெட்டது இருக்கும். உன் மனசுன்னு இல்லாம எல்லோரையும் புரிஞ்சுக்கிட்டு நட. உன் கண்ணிலேருந்து ஒரு சொட்டுக் கண் ணீர் வரக் கூடாது...''

புக்ககம் புறப்பட்ட மாலதியை நெஞ் சோடு சேர்த்துக் கொண்டு புத்தி சொன்ன அகிலாண்டத்தின் கண்களிலிருந்து இரு சொட்டுக் கண்ணீர் தெறித்து விழுந்தது.

''ம்... ம்... ரயிலுக்கு நேரமாச்சு. கிளம் பும்மா. வாசல்ல டாக்ஸி வந்து பத்து நிமிஷம் ஆகிறது...''

சிவராமன் அவசரப்படுத்தினார்.

பதினறு.

பதினேழு.

பதினெட்டு............ இருபத்தைந்து!

எத்தனே இடங்கள்! அத்தனேயும் ஏமாற் றங்கள்.

''எங்க கட்சித் தலேவர் பத்து கிலோ எடையில் ஒரு இரும்புப் பெல்ட்டுக்கு ஆர்டர் கொடுத்திருக்கார்!''

''இரும்பு பெல்ட்டா? எதுக்கு?''

''அவருக்கு எடைக்கு எடை நாண யம் கொடுக்கும்போது மட்டும் அணிந்து கொள்வதற்கு!'' —கற்பகம் ராமன்



அவன் தேய்ந்து கொண்டு வந்தான். மாற்றங்கள் அவனுள் மட்டுமில்லே.

''மூணு வேளேயும் தண்டச் சோற்றை முழுங்கிட்டு ஊரைச் சுத்திட்டு... இது என்ன சத்திரம்னு நெனேச்சிட்டிருக்கானு?'' என்று சிவராமன் முன்மொழிய...

''ஏண்டா! ஒரு வேலேயைத் தேடிக்க மாட்டியா? படிச்சு என்ன பிரயோசனம்? அப்பா சொல்றப்பல...'' என வழி மொழிந்து அகிலாண்டம் அவன் மனசுள் நிக்குச்சியைச் செருகினாள்.

தேர்தல் வந்தது.

வாக்குறுதிகள் தேசிய கீதமாய் ஒலித்தன.

இன்னும் பத்து ஆண்டுகளில் வேலே யில்லாத் திண்டாட்டம் ஒழியும். வறுமை ஒழியும். பொருளாதார நிலே மேம்படும். வளம் சிறக்கும்.

கேட்கக் கேட்க நெஞ்சில் சுவைதட்டிற்று.

நம்பினான்.

'ஒருநாள் காலே வாக்குச் சாவடியில் ஒரு மணி நேரத்திற்கும் மேலாக நின்று விரல் நுனியில் கரும்புள்ளி குத்திக்கொண் டான்!

நாட்கள் செல்லச் செல்ல அவன் சூடா ஞன். குமுறிச் சிரித்தான். 'இன்னும் பத்து வருஷத்திலே வேலேயில்லாத் திண்டாட்டம் ஒழிஞ்சுடும்! அப்போ பேசிக்கிறேன்!' என்று கத்தினான். அகிலாண்டம் பயப்பட்டாள்.

ஒரு வெள்ளிக்கிழமை.

அறையின் மூடிய கதவுக்குள்ளிருந்து அவன் குரல் ஓங்கி ஒலித்தது.

''இந்தத் தடவை கோட்டை விட்டிடா தேடா...''

அகிலாண்டத்தின் குரலேப் போல் தன் குரலே மாற்றிக் கொண்டு பேசினான்.

''நீ சும்மா இரும்மா... சார்! என்ன கேள்வி கேட்கப் போறீங்க? கேளுங்க... இந்தியாவின் பிரதம மந்திரி யார்?... நான் தான்... இந்த வருஷம் பாரத ரத்ன விருது யாருக்குக் கிடைச்சுது?... எனக்குத்தான்.. அடுத்த ஒலிம்பிக் பந்தயம் எங்கே நடக்கும்? எங்க கிராமத்துலதான்... எப்படி சார்! எல்லாத்தையும் அப்படியே உருப்போட்டு வச்சிருக்கேன். தலேயணேயில பஞ்சு அடைக் கிற மாதிரி எல்லாத்தையும் திணிச்சு வச்சிருக் கேன். இத பாருங்க சார்... இன்னும் ஒரு வாரத்துல ஒழுங்கான தகவல் வரலே... ஒரே குண்டு. உங்க கம்பெனியை அப்படியே இடிச்சுத் தரைமட்டமாக்கிடுவேன்!...''

கட்டுப்பாட்டின் பிடி தளர்ந்து அவன் எங்கோ நழுவிக் கொண்டிருந்தான். நிதானத் தலேகளே ஒரே நிமிஷத்தில் அறுத்தெறிந்து விட்டு எங்கோ ஆவேசமாக ஓடிக் கொண் டிருந்தான்.

அறைக்கதவு படபடத்தது. அவனது ஆவே சத்திற்குப் பதில் சொல்ல முடியாமல் திணறியது.

அகிலாண்டம் துடித்தாள்.

''ஏங்க! போய் அவனே எப்படியாவது அடக்கப் பாருங்களேன். இன்னும் கொஞ்ச நேரத்தில் நம்ம மீனுவைப் பெண் பார்க்க அவங்கள்ளாம் வந்திடுவாங்க. போங்க ளேன்!...''


இந்த நூற்றாண்டின் எச்சரிக்கை!
வவேசு
இதுதான் சமயம் இயந்திர மனிதா!
இதயம் இருப்பதை எண்ணிப் பார்த்திடு
இனிஒரு கணம்நீ தாமதம் செய்தால்
மனித இயந்திரம் ஆகிப் போவாய்!
கண்ணில் தெரியும் வான விளிம்பினைக்
கை விரலாலே வருடித் திறக்க
விண்ணினைச் சாடிய விந்தைக் கோள்கள்
மண்ணினை மறந்தன மனிதக் கால்கள்;
சாலையில் கசங்கும் மனித நிழல்கள்
ஆலைப் புகையால் கருத்திருக்கின்றன;
பாறையைத் தூக்குமா பட்டுப் பூச்சிகள்?
கூரை வானைத் தாங்குமா குச்சிகள்?
இதுதான் சமயம் எண்ணிப் பார்த்திடு!
விரைவுச் சக்தியை அனைத்திலும் விதைத்ததால்
குறைந்தது காலம்; குலைந்தது ஞாலம்
காதல் செய்யினும் கடியா ரத்தின்
பாதையைப் பார்க்கும் புதுமை உறவுகள்;
எண்ணிப் பார் இதை—
எதற்கோ இந்த முதுகுச் சுமைகள்!
எதுவரை இந்த ஒப்பனைச் சுவைகள்!
ஒருமுறை யேனும் சிறகு விரித்திடு
இரும்பினுள் ''இயற்கை'', சிறைப்படும் விரைந்திடு
இதுதான் சமயம் இயந்திர மனிதா
இதயம் இருப்பதை எண்ணிப் ·பார்த்திடு!

# 36 சௌரிங்கி லேன்





**கதை:**

காலையில் பள்ளிக்கூடம் போய், மாலையில் அதே ரிக்‌ஷாவில் திரும்பி, தன்னந் தனியே 36 சௌரிங்கி லேனில் வசிக்கும் ஆங்கிலோ-இந்திய டீச்சர் வயலெட்டின் வாழ்க்கையில் ஒரு சந்தோஷ மின்னல் மாதிரி வருகிறார்கள் அவளுடைய பழைய மாணவி நந்திதாவும் அவள் காதலன் சமரேஷும். தனியிடங்களிலும், டாக்ஸியிலும் தங்கள் தீவிரமான காதலை வெளிப்படுத்த இயலாத நிலையில், ஆசிரியையை நன்றாகச் சிநேகம் பிடித்து, அவள் ஃபிளாட்டிலேயே தங்கிக் கொட்டமடிக்கிறார்கள். தனிமையின் தகிப்பு தன் வாழ்க்கையில் சற்றுத் தணிந்தது போல் ஆசிரியை உணரும் சமயம், காதலர்கள் திருமணம் செய்து கொண்டு பரிசாகக் கிடைத்த பங்களாவுக்குத் தனியே குடிபோய் விடுகிறார்கள். ஆசிரியையின் ஃபிளாட்டில் இருந்தவரை அவளுடன் அடிக்கிற லூட்டி என்ன, பேல்பூரியும், ஐஸ்கிரீமும் சாப்பிட்டுக் கொண்டு, மழையில் ஒரே குடையில் நனைந்து கொண்டும் அடிக்கும் சிரிப்புக் கும்மாளம் என்ன; கல்யாணத்துக்குப் பிறகு அவளைப் பார்த்தாலும் சாக்குச் சொல்லி நழுவும் நழுவல் என்ன—பரிதாபமாய்இருக்கிறது,ஆசிரியையைப் பார்க்க.

**நடிப்பு:**

பாதி நாளும் லிஃப்டை உபயோகிக்க முடியாமல் சோர்ந்துபோய் மாடிப் படிகளை ஏறுவதும், கல்கத்தாவின் மின்சாரத் தடங்கலை நொந்து கொண்டே தீக்குச்சி கிழித்து விளக்கேற்றுவதும், விடுதியிலிருக்கும் நோய் வாய்ப்பட்ட சகோதரனுக்கு ஆறுதல்சொல்லுவதுமாகப் படம் முழுக்க மெலிதாக இழையோடும் சோகத்தைத் துல்லியமாக உணரச் செய்கிறது ஜெனிஃபர் கெண்டலின் நடிப்பு. சமரேஷாக தீர்த்திமான் சாட்டர்ஜியும், பழைய மாணவி நந்திதாவாக தேபஸ்ரீ ராயும் மிக இயற்கையாக நடித்திருக்கிறார்கள்.

**டைரக்‌ஷன்:**

முதலில் சிறுகதையாக எழுத நினைத்து, பின் திரைக்கதையாக எழுதியிருப்பதுடன், படத்தை வெகு நேர்த்தியாக இயக்கியும் இருக்கிறார் அபர்ணா சென். (இவருக்கு இது முதல் படம், டைரக்‌ஷனைப் பொறுத்தவரை) கல்கத்தாவின் பகுமையான இடங்களாகட்டும், இருளில் மங்கும் இடங்களாகட்டும் காமிரா கவிதையல்ல, புதுக் கவிதையே பாடியிருக்கிறது!

**குறை:**

வடக்கிலிருந்து இரண்டு வருஷங்களுக்குப் பிறகு இங்கே வந்திருக்கிறதே என்பது ஒன்றுதான் குறை.

-சாருகேசி



''இவ்வளவு பெரிய வீட்டை ராப் பகலா கண் முழிச்சு எழுதியே சம்பாதிச்சதாச் சொல்றீங்களே, அவ்வளவு பெரிய எழுத்தாளரா நீங்க?''

''நீங்க ஒண்ணு! கள்ளக் கணக்கு எழுதிச் சம்பாதிச்சதுன்னு சொன்னேன்!''

—இராம. அழகுமுத்து

வரதட்சிணைக் கொடுமை பற்றிப் பிழியப் பிழிய ஒரு சின்னப் படம் காண்பித்து 'வணக்கம்' போட்டுப் புதுமையாய்க் கதை ஆரம்பிக்கிறது.

அந்தக் கதையை எழுதிய கண்ணீர் நாயகி கே. ஆர். விஜயா. மாவட்டக் கலெக்டர். வீட்டோடு மாவாட்டும் கணவராய் ஜி.சீனிவாசன். எந்தப் பையன் சின்ன வயதில் வரதட்சிணை கொடுக்கவில்லை என்பதற்காகத் தாலி கட்டுவதை நிறுத்தி, விபசாரி என்று பொதுவில் வசை பாடினானோ, அவனுடைய வறுமைப் பெண் கலக்ஷ்னாவே கலெக்டருக்கு மூத்த மருமகளாக வந்து சேர்கிறாள். பழைய கோபங்கள் தலைதூக்க, கல்யாணத் திருப்புமும் அவளை மருமகளென ஏற்க மறுக்கிறாள் கலெக்டர். போதாத குறைக்கு மூத்த மகன் (ராஜேஷ்) விமான விபத்தில் சாம்பலாகிப் போக, விதவை மருமகளுக்கும் விரட்டும் மாமியாருக்குமான சூடான போராட்டம் தான் மையக்கதை.

ஆரோக்கியமான கதை. சுவையான சினிமாத்தன சம்பவங்களுக்கிடையில், யதார்த்தமான காட்சிகளையும் செருகியிருக்கிறார் டைரக்டர். போலீஸ்கார மருமகளும், சாலை விதிகளை மீறிய கலெக்டர் மாமியாரும் கோர்ட்டில் சந்திக்கிற காட்சி அந்த ரகமென்றால், கரிக்கட்டை என்ற வுடன் சூடாகிப் போகும் ஜி. சீனிவாசனின் முறைப்பு இந்த ரகம்.

ஆனால் முழுக்க முழுக்க இதை நம்பியே படத்தை எடுக்க கே. எஸ். ஜி. என்ன அந்தக் காலத்து டைரக்டரா? ''சிலுக்கு எங்கே?'' என்று விநியோகஸ்தர்கள் கேட்டால்?

'ஹலோ பூர்ணிமா தேவியா? நம்ம படத்தில ஒரு அட்டகாசமான காரெக்டர்.... சிலுக்கு, அனுராதாவையெல்லாம் தூக்கியடிச்சடணும்...'

'ஜமாய்ச்சடறேன் சார்...'

''கே.எஸ்.ஜி ப்ளஸ் கே.எஸ்.ஜி.' வசனம் (பெரும்பாலான வசனங்களில் இரட்டை அர்த்தம். மூடுமந்திரமில்லாத பச்சைகளும் உண்டு.)

பாத்திர அமைப்புகள் எல்லாமே டைரக்டரின் சாமர்த்தியம். எது சீரியஸ் பாத்திரம், எது காமெடி பாத்திரம் என்று கண்டுபிடிக்க முடியாதபடி ஒரு விசித்திரக் கலவை. அதனாலேயே கலக்ஷ்னாவைத் தவிர யாரும் நம்மை அசைக்கவில்லை.

இளையராஜாவும், நாலு பாடல்களும் ஏனோதானோ.

இந்த யுகத்திற்காகத் தர்மத்தை விட்டுக் கொடுத்திருக்கிறார்கள்.

—ஜெயமன்மதன்

# யுகதர்மம்



# தெரிய போகிற விஷயங்கள்!



(1) தியாகராஜன் சொந்தத்தில் அலுமினிய பாக்டரி ஒன்றை நடத்தி வருகிறார். (2) பிரெஞ்சு மொழி எழுதப் படிக்கத் தெரிந்த ஒரே நடிகை லட்சுமி. (3) தனிப்பட்ட நிறுவனங்களுக்கு விளம்பரப் படங்கள் தயாரித்துத் தருகிறார் பிரதாப். (4) அனுராதா வீட்டுக்கு எதிர் வீட்டில் குடியிருப்பவர் எல். ஆர். ஈஸ்வரி. (5) ஜெய்சங்கர் விரைவில் தனது 200 வது படத்தில் நடித்து முடிக்கப் போகிறார். (6) ஊர்வசியின் அம்மா ஒரு பி. ஏ. பட்டதாரி. வானொலியில் அறிவிப்பாளராக முன்பு பணியாற்றியிருக்கிறார். (7) இலங்கையில் இருந்து சென்னைக்குத் தப்பிப் பிழைத்த விஜயகுமார் வந்ததும் வராததுமாக மூகாம்பிகை கோவிலுக்குப் போய் வந்தார். (8) பிரபு ஒரு படத்திற்கு வாங்கும் தொகை மூன்றரை லட்சம் ரூபாய் (9) சிலுக்கு வெளியூருக்குப் போகும்போது தன் கூடவே தாடிக்காரன் படத்தையும் எடுத்துச் செல்கிறார். (10) காசு போட்டால் மட்டுமே பேச முடியும் டெலிபோன் கமலஹாசன் வீட்டில் மட்டுமே உள்ளது. (11) ரஜினிகாந்த் சமீபத்தில் திருப்பதி போய் பெருமாள் தரிசனம் செய்து வந்துள்ளார்.

-ஜெயலட்சுமி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani

Editor: K. Rajendran

